ஆங்கீரச ஆவணி
திருவள்ளுவராண்டு 2023
1992 ஆவணி

**ஆறு பகுதிகள் கொண்ட ஒரு தொகுதியின் விலை.**

இலங்கையில் : ரூபா 2100|-
இந்தியாவில் : ரூபா 900|-
பிறநாடுகளில் அமெரிக்க டாலர் 50|-

**இரண்டாம் பகுதி உருவாக அணி செய்தவர்:**
திரு. பி. பாலசுந்தரம் அவர்கள்,
கொழும்பு.

**பாட்டு முதற் குறிப்பு அகராதி**
**பாட்டுடைக் கோவில் அகராதி**
**பாட்டுத் தலைப்பு அகராதி**
**ஆசிரியர் அகராதி**
**என்பன**
**ஆறாம் பகுதியில்**
**இறுதிப் பக்கங்களாக உள.**
**தொகுப்பின் பொருளடக்கம்**
**முழுமையும் எல்லாப் பகுதிகளிலும்**
**முன் பக்கங்களில் உள.**

**ஒளிஅச்சுக்கோப்பு, அச்சிடல்:**

*காந்தளகம், 4, முதல்மாடி, 834, அண்ணாசாலை,*
*சென்னை-600 002. தொலைபேசி: 834505, 8250050.*

## நூலாக்கம்

**பதிப்பாசிரியர்:** சித்தாந்தச் செம்மல், சைவசித்தாந்த மாமணி விதவான் இரா. அம்பை சங்கரனார் ஆசிரியர், ''சித்தாந்தம்'' சென்னை. **நூல் தொகுப்பு சேகரிப்பில் உதவி, ஆலோசனை:** க. முத்துக்குமாரசுவாமி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்; புலவர் வெ.சா. ஏகாம்பரம், புலியூர், சென்னை; சி.என். சிங்காரவேல், சி.ஐ.டி. நகர், சென்னை; ந. ஜெயராமன், மேற்கு மாம்பலம், சென்னை; க. சோமசுந்தரம் பிள்ளை, இந்திரா நகர், சென்னை; சாது தங்கவேல் சுவாமிகள், பாம்பன் சுவாமிகள் திருமடம்; புலவர் அ. வைத்தியநாதன், விழுப்புரம்; புலவர் கோ. கதிர்வேல் முதலியார், ஆரணி; புலவர் ந. தண்டபாணி, புதுவண்டிப்பாளையம்; சுப. ஆவுடையப்ப தேசிகர், அம்பாசமுத்திரம்; மு.சு. சங்கர், திருநெல்வேலி; பீக்கே குமாரசாமிக்கவுண்டர், வெள்ளக்கோவில்; புலவர் வி. அண்ணாமலை முதலியார், பங்களூர்; மயிலங்கூடலூர் க. நடராசன், யாழ்ப்பாணம்; க. சொக்கலிங்கம், நாயன்மார் கட்டு, யாழ்ப்பாணம்; க. சண்முகலிங்கம், சைவபரிபாலன சபை, யாழ்ப் பாணம்; முனைவர் நா. சுப்பிரமணியன், யாழ்ப்பாணம்; புலவர் த. கனகரத்தினம், வெள்ளவத்தை, கொழும்பு; க. கந்தசாமி, கொழும்புத் தமிழ்ச் சங்கம், கொழும்பு; மு. கணபதிப்பிள்ளை, மறவன்புலவு, சாவகச்சேரி; வீரகேசரி, கொழும்பு; ஐ. குலவீரசிங்கம், கோலாலம்பூர், மலேசியா; க. ஆறுமுகம், கோலாலம்பூர், மலேசியா; ஈ.வி. சிங்கன், சிரங்கூன் தெரு, சிங்கப்பூர்; ப. படையாட்சி, ரோஸ்கில், மொரிசியசு; பீக்கே நாயுடு, தென் இந்திய சன்மார்க்க ஐக்கிய சங்கம், நந்தி, பிஜி; ஐ.தி. சம்பந்தன், இலண்டன்; கே. எஸ். நடராசா, கனடா; முனைவர் ஆ. கந்தையா, சிட்னி, ஆஸ்திரேலியா. **நூலாக்கம், அகராதி, சுட்டி, குறிப்பு:** முனைவர் நா. சுப்பிரமணியன், முதுநிலை விரிவுரையாளர், யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம், யாழ்ப்பாணம். **நூலாக்கம், மெய்ப்பு, மேற்பார்வை:** புலவர் வெற்றியழகன், சென்னை. **ஒளிஅச்சுக்கோப்பு, கணிப்பொறிப் பணி:** க. இரவி, கோ. பார்த்தசாரதி, க. சாந்தி, ம. இராசப்பா, மூவை ந. சுந்தரராசன், அ. ஜெயராஜசிங்கம், சென்னை. **பக்கமாக்கல்:** ஓவியர்கள் சந்திரஹாசன், பூவரசு, சென்னை. **படச்சுருள் எதிர்மறை:** சக்தி வண்ண ஆய்வகம், சென்னை. **அச்சிடல், கட்டுவேலை:** ஸ்ரீ பாலாஜி கிளாசிக்ஸ், சென்னை. தங்க அச்சு, விநாயகா டைஸ்டாம்பு, சென்னை. **அலுவலக உதவி:** செ. மணிமேகலை, அ. ஜெயராஜ சிங்கம், செ.ரா. ஷோபனா, அ. ஸ்ரீனிவாசன், பெ. ஜெகநாதன், சென்னை. **நிதிக்கட்டுப்பாடு:** தெ. அருணாசலம், சென்னை. **பொதுத்தொடர்பு: இணைப்பு, மேற்பார்வை** தெ. ஈஸ்வரன், கொழும்பு. **தயாரிப்பு:** க. சச்சிதானந்தன், மறவன்புலவு, சாவகச்சேரி.

# பொருளடக்கம்

## இரண்டாம் பகுதி



## மூன்றாம் பகுதி



## நான்காம் பகுதி



## ஐந்தாம் பகுதி



## ஆறாம் பகுதி

உ

# குமரேச சதகம்

## திருப்புல்வயல் குருபாததாசர்

### காப்பு

பூமேவு புல்லைப் பொருந்துகும ரேசர்தம்மேல்
தேமே வியசதகஞ் செப்பவே—கோமேவிக்
காக்குஞ் சரவணத்தான் கம்பகும்பத் தைந்துகரக்
காக்குஞ் சரவணத்தான் காப்பு. 1

### அவையடக்கம்

மாரிக்கு நிகரென்று பனிசொரிதல் போலவு
மனைக்குநிக ரென்று சிறுபெண்
மணல்வீடு கட்டுவது போலவுஞ் சந்திரன்முன்
மருவுமின் மினிபோ லவும்
பாருக்கு ணல்லோர்மு னேபித்தர் பலமொழி
பகர்ந்திடுஞ் செயல் போலவும்
பச்சைமயி லாடுதற் கிணையென்று வான்கோழி
பாரி லாடுதல் போலவும்
பூரிக்கு மினியகா வேரிக்கு நிகரென்று
போது வாய்க்கால் போலவும்
புகல்சிப்பி முத்துக்கு நிகராப் பளிங்கைப்
பொருந்த வைத்தது போலவும்
வாரிக்கு முன்வாவி பெருகல்போ லவுமின்சொல்
வாணர்மு னுகந்து புல்லை
வாலகும ரேசர்மேற் சதகம்பு கன்றனன்
மனம்பொ றுத்தருள் புரிவையே. 2



## நூல்

### குமரேசர் மகிமை

பூமிக்கொ ராறுதலை யாய்வந்து சரவணப்
பொய்கை தனில்வி ளையாடியும்
புனிதற்கு மந்த்ரவுப தேசமொழி சொல்லியும்
போதனைச் சிறையில் வைத்தும்
தேமிக்க வரிகரப் பிரமாதி கட்குஞ்
செருக்கமுடி யாவ சுரனைத்
தேகங் கிழித்துவடி வேலினா லிருகூறு
செய்தமரர் சிறைத விர்த்தும்
நேமிக்கு ளன்பரிட ருற்றசம யந்தனி
னினைக்குமுன் வந்து தவியும்
நிதமுமெய்த் துணையாய் விளங்கலா லுலகிலுனை
நிகரான தெய்வ முண்டோ
மாமிக்க தேன்பருகு பூங்கடம் பணியுமணி
மார்பனே வள்ளி கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 3

### அந்தண ரியல்பு

குறையாத காயத்ரி யாதிசெப மகிமையுங்
கூறு சுருதிப் பெருமையுங்
கோதிலா வாகம புராணத்தின் வளமையும்
குலவுயா காதி பலவும்
முறையா நடத்தலாற் சகலதீ வினைகளையு
முளரிபோ லேத கிப்பார்
முதன்மைபெறு சிலைசெம்பு பிருதுவிக ளிற்றெய்வ
மூர்த்தமுண் டாக்கு விப்பார்
நிறையாக நீதிநெறி வழுவார்க ளாகையா
னீண்மழை பொழிந்தி டுவதும்
நிலமது செழிப்பது மரசர்செங் கோல்புரியு
நிலையுமா தவர்செய் தவமும்
மறையோர்க ளாலே விளங்குமிவ் வுலகத்தின்
மானிடத் தெய்வ மிவர்காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 4

### அரச ரியல்பு

குடிபடையி லபிமான மந்திரா லோசனை
குறிப்பறிதல் சத்ய வசனங்
கொடைநித்த மவரவர்க் கேற்றமரி யாதைபொறை
கோடாத சதுரு பாயம்
படிவிசா ரணையொடு ப்ரதானிதள கர்த்தரைப்
பண்பறிந் தேய மைத்தல்
பல்லுயி ரெலாந்தன் னுயிர்க்குநிக ரென்றே
பரித்தல்குற் றங்கள் களைதல்
துடிபெறு தனக்குறுதி யானநட் பகமின்மை
சுகுணமொடு கல்வி யறிவு
தோலாத காலமிட மறிதல்வினை வலிகண்டு
துஷ்ட நிக்ரக சௌரியம்
வடிவுபெறு செங்கோ னடத்திவரு மரசர்க்கு
வழுவாத முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 5

### வணிக ரியல்பு

கொண்டபடி போலும்விலை பேசிலா பஞ்சிறிது
கூடி வரநய முரைப்பார்
கொள்ளுமொரு முதலுக்கு மோசம்வா ராதபடி
குறுகவே செலவு செய்வார்
வண்டப் புரட்டர்தா முறிதந்து பொன்னடகு
வைக்கி னுங்கட னீந்திடார்
மருவுநா ணயமுளோர் கேட்டனுப் புகினுமவர்
வார்த்தை யிலெலாங் கொடுப்பார்
கண்டெழுது பற்றுவர வினின்மயிர் பிளந்தே
கணக்கிலணு வாகி லும்விடார்
காசுவீ ணிற்செல விடாருசித மானதிற்
கனதிரவி யங்கள் விடுவார்
மண்டலத் தூடுகன வர்த்தகஞ் செய்கின்ற
வணிகர்க்கு முறைமை யிதுகாண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 6



### வேளாள ரியல்பு

நல்லதே வாலயம் பூசனை நடப்பது
நாடாறு மழைபொ ழிவதும்
நாடிய தபோதனர்கண் மாதவம் புரிவது
நவில்வேத வேதி யரெலாஞ்
சொல்லரிய யாகாதி கருமங்கள் செய்வதுந்
தொல்புவி செழிக்கு நலமுஞ்
சுபசோ பனங்களுங் கொற்றவர்கள் செங்கோ
லுலங்கு மனுநெறி முறைமையும்
வெல்லரிய சுகிர்தமொடு வர்த்தகன் கொள்விலையும்
விற்பனையு மதிக புகழும்
மிக்கவதி காரமுந் தொழிலாளர் சீவனமும்
வீரரண சூர வலியும்
வல்லமைகள் சகலமும் வேளாளர் மேழியின்
வாழ்வினான் விளைவ தன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 7

### பிதாக்கள்

தவமதுசெய் தேபெற் றெடுத்தவன் முதற்பிதா
தனைவளர்த் தவனொரு பிதா
தயையாக வித்தையைச் சாற்றினவ னொருபிதா
சார்ந்தசற் குருவொரு பிதா
அவமறுத் தாள்கின்ற வரசொரு பிதாநல்ல
வாபத்து வேளை தன்னி
லஞ்சலென் றுற்றதுயர் தீர்த்துளோ னொருபிதா
வன்புளமு னோனொரு பிதா
கவளமிடு மனைவியைப் பெற்றுளோ னொருபிதா
கலிதவிர்த் தவனொரு பிதா
காசினியி லிவரைநித் தம்பிதா வென்றுளங்
கருதுவது நீதி யாகும்
மவுலிதனின் மதியரவு புனைவிமல ருதவுசிறு
மதலையென வருகுரு பரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 8

### ஒன்றையொன்று பற்றியிருப்பன

சத்தியந் தவறா திருப்பவ ரிடத்தினிற்
சார்ந்துதிரு மாதிருக் குஞ்
சந்ததந் திருமா திருக்கும் மிடந்தனிற்
றனதுபாக் கியமிருக் கும்
மெய்த்துவரு பாக்கிய மிருக்கும் மிடந்தனில்
விண்டுவின் களையிருக்கும்
விண்டுவின் களைபூண் டிருக்கும் மிடந்தனின்
மிக்கான தயையிருக் கும்
பத்தியுட னினியதயை யுள்ளவ ரிடந்தனிற்
பகர்தரும மிகவிருக் கும்
பகர்தரும முள்ளவ ரிடத்தினிற் சத்துரு
பலாயனத் திறலிருக் கும்
வைத்திசை மிகுந்ததிற லுள்ளவ ரிடத்தில்வெகு
மன்னுயிர் சிறக்கு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 9

### இவர்க்கிவர் தெய்வமெனல்

ஆதுலர்க் கன்னங் கொடுத்தவர்க ளேதெய்வ
மன்பான மாணாக் கருக்
கரியகுரு வேதெய்வ மஞ்சினோர்க் காபத்
தகற்றினோ னேதெய்வ மாம்
காதலுறு கற்புடைய மங்கையர் தமக்கெலாங்
கணவனே மிக்க தெய்வங்
காசினியின் மன்னுயிர் தமக்கெலாங் குடிமரபு
காக்குமன் னவர்தெய்வ மாம்
ஓதரிய பிள்ளைகட் கன்னைதந் தையர்தெய்வ
முயர்சாதி மாந்தர் யார்க்கு
முறவின்முறை யார்தெய்வம் விசுவாச முள்ளபேர்க்
குற்றசிவ பத்தர் தெய்வம்
மாதயையி னாற்றூத் திரர்க்குமறை யோர்தெய்வம்
வானவர்க் குத்தெய்வ நீ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 10



### இவர்க்கிது நினைவெனல்

ஞானநெறி யாளர்க்கு மோக்ஷத்தி லேநினைவு
நல்லறிவு ளோர்த மக்கு
நாடொறுந் தருமத்தி லேநினைவு மன்னர்க்கு
ராச்சியந் தன்னி னினைவு
ஆனகா முகருக்கு மாதர்மே லேநினைவு
ளஞ்சாத திருட ருக்கிங்
கனுதினங் களவிலே நினைவுதன வணிகருக்
காதாய மீது நினைவு
தானமிகு குடியாள ருக்கெலாம் வேளாண்மை
தனினினைவு கற்ப வர்க்குத்
தகுகல்வி மேனினைவு வேசியர்க் கினியபொரு
டருவோர்கண் மீது னினைவு
மானபர னுக்குமரி யாதைமே னினைவெற்கு
மாறாதுன் மீது நினைவு
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 11

### இவர்க்கிது வில்லையெனல்

வேசைக்கு நிசமில்லை திருடனுக் குறவில்லை
வேந்தற்கு நன்றி யில்லை
மிடியற்கு விலைமாதர் மீதுவங் கணமிலை
மிலேச்சற்கு நிறைய தில்லை
ஆசைக்கு வெட்கமிலை ஞானியா னவனுக்கு
ளகமில்லை மூர்க்கன் தனக்
கன்பில்லை காமிக்கு முறையில்லை குணமிலோர்
கழகில்லை சித்த சுத்தன்
பூசைக்கு நவிலங்க சுத்தியில்லை யாவுமுணர்
புலவனுக் கயலோ ரிலை
புல்லனுக் கென்றுமுசி தானுசித மில்லைவரு
புலையர்க் கிரக்க மில்லை
மாசைத் தவிர்ந்தமதி முகதெய்வ யானையொடு
வள்ளிக் கிசைந்த வழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 1

### இப்படிப்பட்டவ ரிவரெவனல்

நியாயநெறி தவறாம லுலகபரி பாலன
நடத்துமவ னேயரச னாம்
ராசயோ சனைதெரிந் துறுதியா கியசெய்தி
நவிலுமவ னேமந் திரி
நேயமுட னேதன் சரீரத்தை யெண்ணாத
நிர்வாகி யேசூர னாம்
நிலைபெறு மிலக்கண மிலக்கிய மறிந்துசொலு
நிபுணகவி யேகவிஞ னாம்
ஆயதொரு வாகடந் தாதுவி னிதானமு
மறியுமுதி யோன் வைத்திய
னகமின்றி மெய்யுணர்ந் தைம்புல னொழித்துவிட்
டவனேமெய்ஞ் ஞானி யெனலாம்
மாயவர் சகோதரி மனோன்மணிக் கன்பான
வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 13

### விரைந்தடக்கத் தகுவன விவையெனல்

அக்கினியை வாய்முந்து துர்ச்சனரை வஞ்சமனை
யாளைவளர் பயிர்கொள் களையை
யஞ்சா விரோதிகளை யனியாய முடையோரை
யகிர்த்தியப் பெண்க ளார்ப்பைக்
கைக்கினிய தொழிலாளியைக் கொண்ட வடிமையைக்
களவுசெய் யுந்திரு டரைக்
கருதிய விசாரத்தை யடக்கமில் பலிசையைக்
கடிதான கோபந் தனை
மெய்க்கினித லாப்பிணியை யவையுதா சீனத்தை
வினைமூண் டிடுஞ்சண் டையை
விஷமேறு கோரத்தை யன்றடக் குவதலான்
மிஞ்சவிட லாகாது காண்
மைக்கினிய கண்ணிகுற வள்ளிதெய் வானையை
மணஞ்செய்த பேரழக னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 14



### இவர்க்கிது துரும்பெனல்

தாராள மாகக் கொடுக்குந் தியாகிக
டமக்குநற் பொருடு ரும்பு
தன்னுயிரை யெண்ணாத சூரனுக் கெதிராளி
தளமெலா மொருது ரும்பு
பேரான பெரியருக் கற்பரது கையினிற்
பிரயோச னந்து ரும்பு
பெரிதான மோக்ஷசிந் தனையுள்ள வர்க்கெலாம்
பெண்போக மொருது ரும்பு
தீராத சகலமும் வெறுத்ததுற விக்குவிறல்
சேர்வேந்த னொருது ரும்பு
செய்யகலை நாமகள் கடாக்ஷமுள் ளோர்க்கெலாஞ்
செந்தமிழ்க் கவிது ரும்பாம்
வாராரு மணிகொண்முலை வள்ளிதெய் வானையை
மணம்புண ரும்வடி வேலவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 15

### இதனை விளக்குவ திதுவெனல்

பகல்விளக் குவதிரவி நிசிவிளக் குவதுமதி
பார்விளக் குவது மேகம்
பதிவிளக் குவதுபெண் குடிவிளக் குதலரசு
பரிவிளக் குவது வேகம்
இகல்விளக் குவதுவலி நிறைவிளக் குவதுநல
மிசைவிளக் குவது சுதியூ
ரிடம்விளக் குவதுகுடி யுடல்விளக் குவதுண்டி
யினியசொல் விளக்கு வதருள்
புகழ்விளக் குவதுகொடை தவம்விளக் குவதறிவு
பூவிளக் குவது வாசம்
பொருள்விளக் குவதுதிரு முகம்விளக் குவதுநகை
புத்தியை விளக்கு வதுநூல்
மகம்விளக் குவதுமறை சொல்விளக் குவதுநிசம்
வாவியை விளக்கு வதுநீர்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 16

### பிறப்பிட நன்மையால் நன்மை பெறாமை

சிங்கார வனமதி லுதிப்பினுங் காகமது
தீஞ்சொல்புகல் குயிலாகு மோ
திரையெறியும் வாவியிற் பூத்தாலு மேகொட்டி
செங்கஞ்ச மலராகு மோ
அங்கான கத்திற் பிறந்தாலு முயலான
தானையின் கன்றாகு மோ
வாண்மையா கியநல்ல குடியிற் பிறந்தாலு
மசடர்பெரி யோராவ ரோ
சங்காடு பாற்கடல் பிறந்தாலு நத்தைதான்
சாளக்கி ராமமா மோ
தடமேவு கடனீரி லேயுப்பு விளையினுஞ்
சாரசர்க் கரையாகு மோ
மங்காத செந்தமிழ்க் குறுமுனிக் குபதேசம்
வைத்தமெய்ஞ் ஞான குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 17

### பலர்க்கும் பயன்படுவன

கொண்டல்பொழி மாரியு முதாரசற் குணமுடைய
கோவுமூ ருணியி னீருங்
கூட்டமிடு மம்பலத் துறுதருவி னீழலுங்
குடியாளர் விவசாய மும்
கண்டவர்க ளெல்லாம் வரும்பெருஞ் சந்தியிற்
கனிபல பழுத்த மரமுங்
கருணையுட னேவைத் திடுந்தணீர்ப் பந்தலுங்
காவேரி போலூற்ற மும்
விண்டலத் துறைசந்தி ராதித்த கிரணமும்
வீசுமா ருதசீ தமும்
விவேகியெனு நல்லோ ரிடத்திலுறு செல்வமும்
வெகுசனர்க் குபகார மாம்
வண்டிமிர் கடப்பமலர் மாலையணி செங்களப
மார்பனே வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 18



### தாமழியினுங் குணமழியாதவை

தங்கமா னதுதழலி னின்றுருகி மறுகினுந்
தன்னொளி மழுங்கி டாது
சந்தனக் குறடுதான் மெலிந்துதேய்ந் தாலுமோ
தன்மணங் குன்றி டாது
பொங்கமிகு சங்குசெந் தழலில்வெந் தாலுமோ
பொலிவெண்மை குறைவு றாது
போதவே காய்ந்துநன் பால்குறு கினாலும்
பொருந்துசுவை போய்வி டாது
துங்கமணி சாணையிற் றேய்ந்து விட்டாலுந்
துலங்குகுண மொளியாது பின்
றொன்மைதரு பெரியோர் மடிந்தாலு மவர்களது
தூயநிறை தவறாகு மோ
மங்களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரியை
மருவுதிண் புயவாச னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 19

### நரகில் வீழ்வோர்

மன்னரைச் சமரில்விட் டோடினவர் குருமொழி
மறந்தவர் கொலைப் பாதகர்
மாதா பிதாவைநிந் தித்தவர்கள் பரதார
மருவித் திரிந்த பேர்கள்
அன்னங் கொடுத்தபே ருக்கழிவை யெண்ணினோ
ரரசடக் கியவ மைச்ச
ராலய மிகழ்ந்தவர்கள் விசுவாச காதக
ரருந்தவர் தனைப்ப ழித்தோர்
முன்னுதவி யாய்ச்செய்த நன்றியை மறந்தவர்
முகஸ்துதி வழக்கு ரைப்போர்
முற்றுசிவ பத்தரை நடுங்கச் சினத்தவர்கண்
முழுதும்பொ யுரைசொல்லு வோர்
மன்னொருவர் வைத்தபொரு ளபகரித்தோ ரிவர்கண்
மாநரகில் வீழ்வ ரன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 20

### சரீரசுகம்

மாதத் திரண்டுவிசை மாதரைப் புல்குவது
மறுவறுவி ரோசனந் தான்
வருஷத் திரண்டுவிசை தைலம் தலைக்கிடுதல்
வாரத் திரண்டு விசையாம்
மூதறிவி னொடுதனது வயதினுக் கிளையவொரு
மொய்குழ லுடன்சை யோகம்
முற்றுதயிர் காய்ச்சுபா னீர்மோ ருருக்குநெய்
முதிரா வழுக்கை யிளநீர்
சாதத்தி லெவளவா னாலும் புசித்தபின்
றாகந் தனக்கு வாங்கல்
தயையாக வுண்டபி னுலாவலிவை மேலவர்
சரீரசுக மாமென் பர்காண்
மாதவரு மாரிசா ரங்கத் துதித்தகுற
வள்ளிக் குகந்த சரசா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 21

### யார்க்கு மனுபோகம் விடாமை

தேசுபெறு மேருப்ர தக்ஷிணஞ் செய்துமதி
தேசுவடு நீங்க வில்லை
திருமா லுறங்கிடுஞ் சேடனுக் குவணன்
செறும்பகை யொழிந்த தில்லை
ஈசன் கழுத்திலுறு பாம்பினுக் கிரைவே
றிலாமலே வாயு வாகு
மினியகண் ணாகிவரு பரிதியா னவனுக்
கிராகுவோ கனவி ரோதி
ஆசிலாப் பெரியோ ரிடத்தினி லடுக்கினு
மமைத்தபடி யன்றி வருமோ
வவரவர்க ளனுபோக மனுபவித் திடல்வேண்டு
மல்லால் வெறுப்ப தெவரை
வாசவனு மும்பரனை வரும்விசய சயவென்று
வந்துதொழு தேத்து சரணா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 22



### இதுவின்றி யிது சிறவாதெனல்

குருவிலா வித்தைவூ ரறிவிலா வாணிபங்
குணமிலா மனைவி யாசை
குடிநல மிலாநாடு நீதியில் லாவரசு
குஞ்சரமி லாத வெம்போர்
திருவிலா மெய்த்திறமை பொறையிலா மாதவந்
தியானமில் லாத நிஷ்டை
தீபமில் லாதமனை சோதரமி லாதவுடல்
சேகர மிலாத சென்னி
உருவிலா மெய்வளமை பசியிலா வுண்டிபுக
லுண்மையில் லாத வசனம்
யோசனையி லாமந்த்ரி தைரிய மிலாவீர
முதவியில் லாத நட்பு
மருவிலா வண்ணமலர் பெரியோ ரிலாதசபை
வையத் திருந்தென் பயன்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே 23

### பகைக்கப்படாதவ ரிவரெனல்

அரசர்பகை யுந்தவம் புரிதபோ தனர்பகையு
மரியகரு ணீகர் பகையு
மடுத்துக் கெடுப்போர் கொடும்பகையு முட்பகையு
மருளிலாக் கொலைஞர் பகையும்
விரகுமிகு மூரிலுள் ளோருடன் பகையுமிகு
விகடப்ர சங்கி பகையும்
வெகுசனப் பகையுமந் திரவாதி யின்பகையும்
விழைமருந் துவர்கள் பகையும்
உருவுமக் கவிவாணர் பகையுமா சான்பகையு
முறவின்முறை யார்கள் பகையும்
முற்றதிர வியமுளார் பகையுமந் திரிபகையு
மொருசிறிது மாகாது காண்
வரநதியின் மதலையென வினியசர வணமிசையில்
வருதருண சிறுகு ழவியே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 24

### பேயெனப்படுவோ ரிவரெனல்

கடனுதவு பேர்வந்து கேட்கும்வே ளையின்முகங்
கடுகடுக் கின்ற பேயுங்
கனமருவு பெரியதனம் வந்தவுட னிறுமாந்து
கண்விழிக் காத பேயும்
அடையுடன் சத்துருவின் பேச்சைவிசு வாசித்
தகப்பட் டுழன்ற பேயு
மாசைமனை யாளுக்கு நேசமா யுண்மைமொழி
யானதை யுரைத்த பேயும்
இடரிலா நல்லோர்கள் பெரியோர்க ளைச்சற்று
மெண்ணா துரைத்த பேயு
மினியபரி தானத்தி லாசைகொண் டொருவற்
கிடுக்கண்செய் திட்ட பேயும்
மடமனை யிருக்கப் பரத்தையைப் புணர்பேயும்
வசைபெற்ற பேய்க ளன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 25

### அவ்வவ்வினத்தி லுயர்ந்தவை

தாருவிற் சந்தான நதியினிற் கங்கைவிர
தத்தினிற் சோம வாரந்
தகைபெறு நிலத்தினிற் காஸ்மீர கண்டந்
தலத்திற் சிதம்பர தலம்
சீருலவு ரிஷிகளில் வசிட்டர்பசு விற்காம
தேனுமுனி வரினா ரதன்
செல்வநவ மணிகளிற் றிகழ்பதும ராகமணி
தேமலரி லம்போ ருகம்
பேருலவு கற்பினி லருந்ததி கதித்திடு
பெலத்தின் மாருதம் யானையிற்
பேசிலை ராவதந் தமிழினி லகத்தியம்
பிரணவம் மந்தி ரத்தில்
வாரிதியி லேதிருப் பாற்கடல் குவட்டினின்
மகாமேரு வாகு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 26



### அவரவர்க்குப் பெலமாவன

அந்தணர்க் குயர்வேத மேபெலங் கொற்றவர்க்
கரியசௌ ரியமே பெல
மானவணி கர்க்குநிதி யேபெலஞ் சூத்திரர்க்
காயினே ருழவே பெலம்
மந்திரிக் குச்சது ருபாயமே பெலநீதி
மானுக்கு நடுவே பெலம்
மாதவர்க் குத்தவசு பெலமடவி யர்க்குநிறை
மானவது கற்பே பெலம்
தந்திர மிகுத்தகன சேவகர் தமக்கெலாஞ்
சாமிகா ரியமே பெலஞ்
சான்ற வர்க்குப் பொறுமை யேபெலம்
தமக்குநிறை கல்வி பெலமாம்
வந்தனை செயும்பூசை செய்பவர்க் கன்புபெலம்
வானவடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 27

### இருந்தும் பயன்படாதவை

தருணத்தி லுதவிசெய் யாதநட் பாளர்பின்
றந்தென தராம லென்ன
தராதர மறிந்துமுறை செய்யாத மன்னரைச்
சார்ந்தென்ன நீங்கி லென்ன
பெருமையுட னாண்மையில் லாதவொரு பிள்ளையைப்
பெற்றென பெறாம லென்ன
பிரியமா யுள்ளன்பி லாதவர்க ணேசம்
பிடித்தென விடுக்கி லென்ன
தெருளாக மானமில் லாததொரு சீவனஞ்
செய்தென செயாம லென்ன
தேகியென வருபவர்க் கீயாத செல்வஞ்
சிறந்தென முறிந்து மென்ன
மருவிளமை தன்னிலில் லாதகன் னிகைபின்பு
வந்தென வராம லென்ன
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 28

### உபகார மில்லாமை

கடனீர் மிகுந்தென்ன வொதிதான் பெருத்தென்ன
காட்டிலவு மலரி லென்ன
கருவேல் பழுத்தென்ன நாய்ப்பால் சுரந்தென்ன
கானின்மழை பெய்து மென்ன
அடர்கழுதை லத்திநில மெல்லாங் குவிந்தென்ன
வரியகுண மில்லாத பெண்
ணழகா யிருந்தென்ன வாஸ்தான கோழைபல
வரியநூ லோதி யென்ன
திடமினிய பூதம்வெகு பொன்காத் திருந்தென்ன
திறன்மிகுங் கரடி மயிர்தான்
செறிவாகி நீண்டென்ன வஸ்த்ரபூ ஷணமெலாஞ்
சித்திரத் துற்று மென்ன
மடமிகுந் தெவருக்கு முபகார மில்லாத
வம்பர்வாழ் வுக்கு நிகராம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 29

### பதரெனப் படுவோர்

தன்பெருமை சொல்லியே தன்னைப் புகழ்ந்தபதர்
சமர்கண் டொளிக்கும் பதர்
தக்கபெரி யோர்புத்தி கேளாத பதர்தோழர்
தம்மொடு சலிக்கும் பதர்
பின்புகா ணாவிடந் தன்னிலே புறணிபல
பேசிக் களிக்கும் பதர்
பெற்றதாய் தந்தைதுயர் படவாழ்ந் திருந்தபதர்
பெண்புத்தி கேட்கும் பதர்
பொன்பண மிருக்கவே போயிரக் கின்றபதர்
பொய்ச்சாட்சி சொல்லும் பதர்
புவியோர் நடத்தையை யிகழ்ந்தபதர் தன்மனைவி
புணர்தல்வெளி யாக்கும் பதர்
மன்புணரும் வேசையுடன் விபசரிக் கின்றபதர்
மனிதரிற் பதரென்பர் காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 30



### காணாவிடிற் றுயரப்படுமவை

இரவிகா ணாவனச மாரிகா ணாதபயி
ரிந்துகா ணாத குமுத
மேந்தல்கா ணாநாடு கரைகள்கா ணாவோட
மின்சொல்கா ணாவி ருந்து
சுரபிகா ணாதகன் றன்னைகா ணாமதலை
சோலைகா ணாத வண்டு
தோழர்கா ணாநேயர் கலைகள்கா ணாதமான்
சோடுகா ணாத பேடு
குரவர்கா ணாதசபை தியாகிகா ணாவறிஞர்
கொழுநர்கா ணாத பெண்கள்
கொண்டல்கா ணாதமயில் சிறுவர்கா ணாவாழ்வு
கோடைகா ணாத குயில்கள்
வரவுகா ணாதசெல விவையெலாம் புவிமீதில்
வாழ்வுகா ணாவிளமை யாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 31

### வியாதி மூலங்கள்

கல்லினான் மயிரினான் மீதூண் விரும்பலாற்
கருதிய விசாரத்தி னாற்
கடுவழி நடக்கையான் மலசல மடக்கையாற்
கனிபழங் கறியுண்ண லால்
நெல்லினா லுமியினா லுண்டபின் மூழ்கலா
னித்திரைக ளில்லாமை யா
னீர்ப்பகையி னாற்பனிக் காற்றிலுட னோதலா
னீடுசரு கிலையூற லால்
மெல்லிநல் லார்கலவி யதிகமுள் விரும்பலால்
வீழ்மலஞ் சிக்குகையி னான்
மிகுசுமை யெடுத்தலா லிளவெயிற் காய்தலான்
மெய்வாட வேலை செயலால்
வல்லிரவி லேதயிர்கள் சாகாதி யுண்ணலால்
வன்பிணிக் கிடமென்பர் காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 32

### செத்தும் சாகாதவர்

அனைவர்க்கு முபகார மாம்வாவி கூவமுண்
டாக்கினோர் நீதி மன்ன
ரழியாத தேவால யங்கட்டி வைத்துளோ
ரறங்கள் செய்த பெரியோர்
தனையொப்பி லாப்புதல்வ னைப்பெற்ற பேர்பொருது
சமர்வென்ற சுத்த வீரர்
தரணிதனி னிலைநிற்க வெந்நாளு மாறாத
தருமங்கள் செய்த பேர்கள்
கனவித்தை கொண்டவர்க ளோயாத கொடையாளர்
காவியஞ் செய்த கவிஞர்
கற்பினின் மிகுந்தவொரு பத்தினி மடந்தையைக்
கடிமணஞ் செய்தோர்க ளிம்
மனிதர்கள் சரீரங்கள் போகினுஞ் சாகாத
மனிதரிவ ராகு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 33

### சாகாதிருந்துஞ் செத்தவர்

மாறாத வறுமையோர் தீராத பிணியாளர்
வருவேட் டகத்தி லுண்போர்
மனைவியை வழங்கியே சீவனஞ் செய்குவோர்
மன்னுமொரு ராச சபையில்
தூறாக நிந்தைசெய் துய்குவோர் சிவிகைகள்
சுமந்தே பிழைக்கின்ற பேர்
தொலையா விசாரத் தழுந்துவோர் வார்த்தையிற்
சோர்வுபட லுற்ற பெரியோர்
வீறாக மனையா டனக்கஞ்சி வந்திடு
விருந்தினை யொழித்து விடுவோர்
வீம்புடன் செல்லாத விவகார மதுகொண்டு
மிக்கசபை யேறு மசடர்
மாறாக விவரெலா முயிருடன் செத்தசவ
மாகியொளி மாய்வர் கண்டாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 34



### சிறிதும் பயன்படாதவர்

பதராகி லுங்கன விபூதிவிளை விக்கும்
பழமைபெறு சுவராகி லும்
பலருக்கு மறைவாகு மாடுறிஞ் சிடுமலம்
பன்றிகட் குபயோக மாம்
கதமிகு கடாவென்னி லுழுதுபுவி காக்கும்வன்
கழுதையும் பொதி சுமக்குங்
கல்லெனிற் றேவர்களு மாலயமு மாம்பெருங்
கான்புற்று மரவ மனையாம்
இதமிலாச் சவமாகி லுஞ்சிலர்க் குதவிசெயு
மிழிவுறு குரங் காயினு
மிரக்கப் பிடித்தவர்க் குதவிசெயும் வாருகோ
லேற்றமா ளிகைவி ளக்கும்
மதமது மிகும்பரம லோபரா லுபகார
மற்றொருவ ருக்கு முண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 35

### உலுத்த ரியல்பு

திரவியங் காக்குமொரு பூதங்கள் போற்பணந்
தேடிப் புதைத்து வைப்பார்
சீலநல மாகவுங் கட்டார்க ணல்லமுது
செய்துணா ரறமுஞ் செய்யார்
புரவலர்செய் தண்டந் தனக்கும்வலு வாகப்
புகுந்திருட ருக்கு மீவார்
புலவரைக் கண்டவுட னோடிப் பதுங்குவார்
புராணிகர்க் கொன்று முதவார்
விரகறிந் தேபிள்ளை சோறுகறி தினுமளவில்
வெகுபணஞ் செலவாக லால்
விளையாடு கிழவனாம் பிள்ளையே பிள்ளையென
மிகுசெட்டி சொன்ன கதைபோல்
வரவுபார்க் கின்றதே யல்லாது லோபியர்கண்
மற்றொருவ ருக்கீவரோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 36

### திருவாழிடங்கள்

கடவார ணத்திலுங் கங்கா சலத்திலுங்
கமலாசனந் தன்னி லுங்
காகுத்தன் மார்பிலுங் கொற்றவ ரிடத்திலுங்
காலியின் கூட்டத்தி லும்
நடமாடு பரியிலும் பொய்வார்த்தை சொல்லாத
நல்லோ ரிடந் தன்னிலு
நல்லசுப லக்ஷண மிகுந்தமனை தன்னிலும்
ரணசுத்த வீரர் பாலும்
அடர்க்கே தனத்திலுஞ் சுயம்வரந் தன்னிலு
மருந்துளசி வில்வத் திலு
மலர்தரு கடப்பமலர் தனிலுமிர தத்திலு
மதிககுண மான ரூப
மடவா ரிடத்திலுங் குடிகொண்டு திருமாது
மாறா திருப்ப ளன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 37

### மூதேவி வாழிடங்கள்

சோரமங் கையர்கணிச முரையார்கள் வாயினிற்
சூதகப் பெண்க ணிழலில்
சூளையிற் சூழ்தலுறு புகையிற் களேபரஞ்
சுடுபுகையி னீசர் நிழலில்
காரிரவி லரசுநிழ லிற்கடா நிழலினொடு
கருதிய விளக்கு நிழலில்
காமுகரி னிஷ்டையில் லாதவர் முகத்திற்
கடுஞ்சினத் தோர் சபையினில்
ஈரமில் லாக்களர் நிலத்தினி லிராத்தயிரி
லிழியுமது பானர் பாலி
லிலைவேல் விளாநிழலி னிதமழுக் கடைமனையி
லேனநா யசகரத் தூள்
வாரிய முறத்தூள் பெருக்குதூண் மூதேவி
மாறா திருப்ப ளென்பார்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 38



### திருத்தினுந் திருந்தாமை

கட்டியெரு விட்டுச் செழுந்தேனை வார்க்கினுங்
காஞ்சிரங் கைப்பு விடுமோ
கழுதையைக் கட்டிவைத் தோமம் வளர்க்கினுங்
கதிபெறுங் குதிரை யாமோ
குட்டியர வுக்கமு தளித்தே வளர்க்கினுங்
கொடுவிட மலாது தருமோ
குக்கனெடு வாலுக்கு மட்டையைக் கட்டினுங்
கோணாமலே நிமிரு மோ
ஒட்டியே குறுணிமை யிட்டாலு நயமிலா
யோனிகண் ணாகி விடுமோ
வுலவுகன கர்ப்பூர வாடைபல கூட்டினு
முள்ளியின் குணமாறு மோ
மட்டிகட் காயிரம் புத்திசொன் னாலுமதின்
மார்க்கமறி யாதை வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 39

### குறிப்பறிதல்

மனதிற் கடும்பகை முகத்தினா லறியலா
மாநிலப் பூடுக ளெலாம்
மழையினா லறியலா நல்லார்பொ லார்தமை
மக்களா லறிய லாகும்
கனமருவு சூரரைச் சமரினா லறியலாங்
கற்றவொரு வித்து வானைக்
கல்விப்ர சங்கத்தி னாலறிய லாங்குணங்
களை நடையினா லறியலாம்
தனதக மடுத்தது பளிங்கினா லறியலாஞ்
சாதிசொல் லாலறிய லாந்
தருநீதி கேள்வியா லறியலாம் பிணிகளைத்
தாதுக்க ளாலறிய லாம்
வனசவிக சிதவதன பரிபூர ணானந்த
வாலவடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 40

### குணமாறாமை

குணமிலாத் துஷ்டமிரு கங்களையும் நயகுணங்
கொண்டுட் படுத்தி விடலாங்
கொடியபல விடநோய்க ளியாவுமௌ ஷதமது
கொடுத்துத் திருப்பி விடலாம்
உணர்விலாப் பிரமராட் சசிமுதற் பேய்களை
யுகந்துகூத் தாட்டி விடலா
முபாயத்தி னாற்பெரும் பறவைக்கு நற்புத்தி
யுண்டாக்க லாமுயிர் பெறப்
பிணமதை யெழுப்பலா மக்கினி சுடாமற்
பெரும்புன லெனச் செய்யலாம்
பிணியையு மகற்றலாங் காலதூ துவரையும்
பின்புவரு கென்று சொலலாம்
மணலையுங் கயிறாத் திரிக்கலாங் கயவர்குண
மட்டுந் திருப்ப வசமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 41

### இத்தீக்குணத்தோ ரிவ்விலங்கு போல்வரெனல்

தான்பிடித் ததுபிடிப் பென்றுமே லவர்புத்தி
தள்ளிச்செய் வோர் குரங்கு
சபையிற் குறிப்பறிய மாட்டாம னின்றவர்
தாம்பய னிலாத மரமாம்
வீம்பினா லெளியவரை யெதிர்பண்ணி நிற்குமொரு
வெறியர்குரை ஞமலி யாவார்
மிகநாடி வருவோர் முகம்பார்த் திடாலோபர்
மேன்மையில் லாத கழுதை
சோம்பலொடு பெரியோர் சபைக்குட் படுத்திடுந்
தூங்கலே சண்டிக் கடா
சூதுட னடுத்தோர்க் கிடுக்கணே செய்திடுந்
துஷ்டனே கொட்டு தேளாம்
மாம்பழந் தனைவேண்டி யந்நாளி லீசனை
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 42



### அற்பர்வாழ்வால் குணம் வேறுபடுதல்

அற்பர்க்கு வாழ்வுசற் றதிகமா னால்விழிக்
கியாவருரு வுந்தோன் றிடா
தண்டிநின் றேநல்ல வார்த்தைக ளுரைத்தாலு
மவர்செவிக் கேறி டாது
முற்பக்ஷ மானபேர் வருகினும் வாருமென
மொழியவும் வாய் வராது
மோதியே வாதப் பிடிப்புவந் ததுபோல
முன்காலை யகல வைப்பார்
விற்பன மிகுத்தபெரி யோர்செய்தி சொன்னாலும்
வெடுவெடுத் தேசி நிற்பார்
விருதா மகத்துவப் பேயது சவுக்கடி
விழும்போது தீரு மென்பார்
மற்புயந் தனினீப மாலையணி லோலனே
மார்பனே வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 43

### இத்தீங்குளோ ரிக்கோள் போல்வரெனல்

அன்னைதந் தையர்புத்தி கேளாத பிள்ளையோ
வஷ்டமச் சனியாகு வா
னஞ்சாம லெதிர்பேசி நிற்குமனை யாள்வாக்
கிலங்கார கச்சன்ம மாம்
தன்னைமிஞ் சிச்சொன்ன வார்த்தைகே ளாவடிமை
சந்திராஷ் டகமென்ன லாந்
தன்பங்கு தாவென்று சபையேறு தம்பியோ
சார்ந்தசன் மச்சூரி யன்
நன்னயமி லாதவஞ் சனைசெய்த தமையன்மூன்
றாமிடத் தில்வியா ழம்
நாடொறும் விரோதமிடு கொண்டோன்
கொடுத்துளோன்
ராகுகே துக்க ளெனலாம்
மன்னயனை யன்றுசிறை தனிலிட்டு நம்பற்கு
மந்திர முரைத்த குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 44

### நல்லினஞ் சேர்பயன்

சந்தன விருக்ஷத்தை யண்டிநிற் கின்றபல
தருவுமவ் வாசனை தருந்
தங்கமக மேருவை யடுத்திடுங் காக்கையுஞ்
சாயல்பொன் மயமே தரும்
பந்தமிகு பாலுடன் விளாவிய தணீரெலாம்
பால்போ னிறங் கொடுக்கும்
படிகபணி கட்குளே நிற்கின்ற வடமுமப்
படியே மணங்கொடுக் கும்
அந்தமிகு மரகதக் கல்லைத் தரித்திடி
லடுத்ததும் பசுமை யாகு
மானபெரி யோர்களொடு சகவாச மதுசெயி
லவர்கள்குணம் வருமென்பர் காண்
மந்தர நெடுங்கிரியின் முன்கடல் கடைந்தவரி
மருகமெய்ஞ் ஞான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 45

### வலியோரையு மூழ்விடாமை

அன்றுமுடி சூடுவ திருக்கரகு ராமன்மு
னருங்கா டுறைந்த தென்ன
வண்டரெல் லாமமிர்த முண்டிடப் பரமனுக்
காலம் லபித்த தென்ன
வென்றிவரு தேவர்சிறை மீட்டநீ களவில்வே
டிச்சியைச் சேர்ந்த தென்ன
மேதினி படைக்குமய னுக்கொரு சிரம்போகி
வெஞ்சிறையி லுற்ற தென்ன
என்றுமொரு பொய்சொலா மன்னவன்விலைபோன
தென்னகாண் வல்ல மையினா
லெண்ணத்தி னாலொன்றும் வாராது பரமசிவ
னெத்தனப் படிமுடியு மாம்
மன்றுதனி னடனமிடு கங்கா தரன்பெற்ற
வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 46



### பெரியோர் வாக்யபரிபாலனஞ் செய்தோர்

தந்தைதாய் வாக்யபரி பாலனஞ் செய்தவன்
றசரத குமார ராமன்
றமையனருள் வாக்யபரி பாலனஞ் செய்தோர்
தருமனுக் கிளைய நால்வர்
சிந்தையி லுணர்ந்துகுரு வாக்யபரி பாலனஞ்
செய்தவ னரிச் சந்திரன்
றேகியென் றோர்க்கிலை யெனாவாக்ய பாலனஞ்
செய்தவன் றான கன்னன்
நிந்தைதவிர் வாக்யபரி பாலனஞ் செய்தவ
னீள்பல மிகுந்த வநுமார்
னிறையுடன் பத்தாவின் வாக்யபரி பாலன
நிலத்தினி னளாயினி செய்தாள்
மந்தைவழி கோயில்குள முங்குலவு தும்பிமுகன்
மகிழ்தர வுகந்த துணைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 47

### முயற்சியின்மிக்க தூழெனல்

வங்காள மேறுகினும் வாருகோ லொருகாசு
மட்டன்றி யதிக மாமோ
வானேறி யுயரப் பறந்தாலு மூர்க்குருவி
வண்ணப் பருந் தாகுமோ
கங்கா சலந்தன்னின் மூழ்கினும் பேய்ச்சுரைக்
காய்நல்ல சுரை யாகுமோ
கடலுக்கு ணாழியை யமுக்கியே மொண்டிடிற்
காணுமோ நானாழி தான்
ஐங்காத மோடினுந் தன்வினைக டன்னொடே
யடையாம னீங்கி விடுமோ
வாரிடஞ் சென்றாலும் வெகுதொலைகள் சுற்றினு
மமைத்தபடி யன்றி வருமோ
மங்காத செந்தமிழ் கொண்டுநக் கீரர்க்கு
வந்ததுயர் தீர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 48

## இடும்பாலழிவு

சூரபத் மன்பெலமு மிராவணன் றீரமுந்
துடுக்கான கஞ்சன் வலியுந்
துடியான விரணியன் வரப்ரசா தங்களுந்
தொலையாத வாலி திடமும்
பாரமிகு துரியோத னாதிநூற் றுவரது
பராக்கிரம மது கைடவர்
பாரிப்பு மாபெலித னாண்மையுஞ் சோமுகன்
பாங்கிலுறு வல்லமை களும்
ஏரணவு கீசகன் கதையுந் திரிபுர
ரெண்ணமுந் தக்க னெழிலு
மிவர்களது சம்பத்து நின்றவோ வவரவ
ரிடும்பா லழிந்த வன்றோ
மாரனைக் கண்ணா லெரித்தருள் சிவன்றந்த
வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 49

## நட்புநிலை

மாமதியின் முயலான ததுதேய் வுழித்தேய்ந்து
வளருமப் போது வளரும்
வாவிதனி லாம்பல்கொட் டிகளதனி னீர்வற்றின்
வற்றிடும் பெருகி லுயரும்
பூமருவு புதல்பூடு கோடையிற் றீய்ந்திடும்
பொங்குகா லந்தழைக் கும்
புண்டரிக மிரவிபோ மளவிற் குவிந்திடும்.
போதுதய மாகின் மலரும்
தேமுடை விளைக்கிலுயிர் கூடவு மிளைக்குமது
தேறிலுயி ருஞ்சிறக் குஞ்
சேர்ந்தோர்க் கிடுக்கணது வந்தாலு நல்லோர்
சிநேகமப் படியாகு மே
வாமன சொரூபமத யானைமுக னுக்கிளைய
வாலகுரு பரவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 50



## கைப்பலனாமவை

பருவத்தி லேபெற்ற சேயும் புரட்டாசி
பாதிசம் பாநடுகை யும்
பலமினிய வாடிதனி லானைவால் போலவே
பயிர்கொண்டு வருகரும் பும்
கருணையொடு மிக்கநா ணயமுளோர் கையினிற்
கடனிட்டு வைத்த முதலுங்
காலமது நேரிற் றனக்குறுதி யாகமுன்
கற்றுணர்ந் திடுகல்வி யும்
விருதரச ரைக்கண்டு பழகிய சிநேகமும்
விவேகிகட் குபகார மாம்
வீணல்ல விவையெலாங் கைப்பலன தாகவபி
விர்த்தியாய் வருமென்பர் காண்
மருவுலா வியநீப மாலையுந் தண்டரள
மாலையும் புனைமார் பனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 51

## சமயத்துக் குதவாதவை

கல்லாது புத்தகந் தனிலெழுதி வீட்டினிற்
கட்டிவைத் திடுவித்தை யுங்
காலங்க ளுக்குதவ வேண்டுமென் றன்னியன்
கையிற் கொடுத்த பொருளும்
இல்லாளை நீங்கியே பிறர்பாரி சதமென்
றிருக்கின்ற குடி வாழ்க்கையு
மேறுமா றாகவே தேசாந் தரம்போ
யிருக்கின்ற பிள்ளை வாழ்வும்
சொல்லான தொன்றுமவர் மனமான தொன்றுமாச்
சொல்லும்வஞ் சகர் நேசமுஞ்
சுகியமா யுண்டென் றிருப்பதெல் லாந்தருண
துரிதத்தி லுதவாது காண்
வல்லான கொங்கைமட மாதுதெய் வானைகுற
வள்ளிபங் காள நேயா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 52

### திரும்பமாட்டாதவை

ஆடரவின் வாயினி லகப்பட்ட தவளையு
மானைவா யிற் கரும்பு
மரிதான கப்பலிற் பாய்மரக் காற்றினி
லகப்பட்டு மெலி காக்கையும்
நாடறிய வேதாரை வார்த்துக் கொடுத்தது
நமன்கைக்கு ளான வுயிரும்
நலமாக வேயணை கடந்திட்ட வெள்ளமு
நாய்வேட்டை பட்ட முசலும்
தேடியுண் பார்கைக்கு ளானபல வுடமையுந்
தீவாதை யான மனையுந்
திரள்கொடுங் கோலரசர் கைக்கேறு பொருளுந்
திரும்பிவா ராவென்பர் காண்
பாடமிசை யன்னக் கொடித்திரள்கொள் சோணாடு
வாழவந் திடு முதல்வனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 53

### இதனினுமிது நன்றென்பவை

கடுகடுத் தாயிரஞ் செய்குவதி லின்சொலாற்
களிகொண் டழைத்த னன்று
கனவேள்வி யாயிரஞ் செய்வதிற் பொய்யுரை
கருத்தொடு சொலாமை னன்று
வெடுவெடுக் கின்றதோ ரவிவேகி யுறவினில்
விவேகியொடு பகைமை நன்று
வெகுமதிக ளாயிரஞ் செய்வதி னரைக்காசு
வேளைகண் டுதவ னன்று
சடுதியிற் பக்குவஞ் சொல்லுங் கொடைக்கிங்கு
சற்றுமிலை யென்ன னன்று
சம்பத் துடன்பிணியின் மெலிகுவதி னோயற்ற
தாரித்தி ரியநன்று காண்
மடுவினிற் கரியோல மென்னவந் தருள்செய்த
மான்மருக னான முதல்வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 54



### பல கூடினு மொன்றற் கீடாகாதவை

தாரகைக ளொருகோடி வானத் திருக்கினுஞ்
சந்திரற் கீடா குமோ
தாருவிற் கொடிதொனிகள் பலகூடி னாலுமொ
தம்பட்ட வோசை யாமோ
கோரமிகு பன்றியின் குட்டிபல கூடினொரு
குஞ்சரக் கன்றா குமோ
கொட்டிமலர் வாவியிற் பலகூடி னாலுமொரு
கோகனத மலரா குமோ
பாரமிகு மாமலைகள் பலகூடி னாலுமொரு
பைம்பொன்மக மேரு வாமோ
பலனிலாப் பிள்ளைக ளனேகம் பிறந்தும்விற்
பனனொருவ னுக்கு நிகரோ
வாரணக் கொடியொரு கரத்திற் பிடித்தொன்றில்
வடிவே லணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 55

### அருமை யறிதல்

மணமாலை யருமையைப் புனைபவர்க ளேயறிவர்
மட்டிக் குரங்கறியு மோ
மக்களுடை யருமையைப் பெற்றவர்க ளேயறிவர்
மலடிதா னறிவ துண்டோ
கணவருடை யருமையைக் கற்பான மாதறிவள்
கணிகை யானவ ளறிவளோ
கருதுமொரு சந்தியின் பாண்டமென் பவைதருங்
களவான நாய றியுமோ
குணமான கிளியருமை தனைவளர்த் தவரறிவர்
கொடிய பூனையு மறியுமோ
குலவுபெரி யோரருமை நல்லோர்க ளேயறிவர்
கொடுமூடர் தாம றிவரோ
மணவாள நீயென்று குறவள்ளி பின்றொடர
வனமூடு தழுவு மழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 56

### தீச்சார்பாற் பயன்படாதவை

மடுவினிற் கஞ்சமல ருண்டொருவ ரணுகாமல்
வன்முதலை யங்கி ருக்கும்
மலையினிற் றேனுண்டு சென்றொருவர் கிட்டாமன்
மருவியதில் வண்டி ருக்கும்
நெடுமைதிகழ் தாழைமல ருண்டொருவ ரணுகாம
நீங்காத முள்ளி ருக்கும்
நீடுபல சந்தன விருக்ஷமுண் டணுகாது
நீளரவு சூழ்ந்தி ருக்கும்
குடிமல்கி வாழ்கின்ற வீட்டினிற் செல்லாது
குரைநாய்க ளங்கி ருக்குங்
கொடுக்குந் தியாகியுண் டிடையூறு பேசுங்
கொடும்பாவி யுண்டு கண்டாய்
வடுவையுங் கடுவையும் பொருவுமிரு கண்ணிகுற
வள்ளிக் குகந்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 57

### கணிகைய ரிழிவு

தேவதா சிகள்வீடு சந்ததப் பெரும்பேட்டை
சேர்ந்திடு படுக்கை வீடு
தெருவாசல் கட்டில்பொது வம்பலமுடுத் ததுகில்
செய்யசூ தாடு சாலை
மேவலா கியகொங்கை கையாடு திரள்பந்து
விழிம னங்கவர் தூண்டிலாம்
மிக்கமொழி நீர்மே லெழுத்ததிக மோகமொரு
மின்னலி ருதொடை சர்ப்பமாம்
ஆவலா கியவல்கு லோதண்டம் வாங்குமிட
மதிகபட மாம னதுகல்
லமிர்தவா யிதழ்சித்ர சாலையெச் சிற்குறி
யவர்க்காசை வைக்க லாமோ
மாவடிவு கொண்டே யொளித்தவொரு சூரனை
வதைத்த வடிவே லாயுதா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 58



### கலிகாலக் கொடுமை

தாய்புத்தி சொன்னான் மறுத்திடுங் காலமுயர்
தந்தையைச் சீறு காலஞ்
சற்குருவை நிந்தைசெய் காலமெய்க் கடவுளைச்
சற்றுமெண் ணாத காலம்
பேய்தெய்வ மென்றுப சரித்திடுங் காலம்
புரட்டருக் கேற்ற காலம்
பெண்டாட்டி வையினுங் கேட்கின்ற காலநற்
பெரியர்சொல் கோளாத காலம்
தேய்வுடன் பெரியவன் சிறுமையுறு காலமிகு
சிறியவன் பெருகு காலஞ்
செருவில்விட் டோடினோர் வரிசைபெறு காலம்வசை
செப்புவோர்க் குதவு காலம்
வாய்மதம் பேசிவிடு மனியாய காரர்க்கு
வாய்த்தகலி கால மையா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 59

### அவரவர்க் குரியவை

கல்வியொடு கனமுறச் சபையின்மேல் வட்டமாக்
காணவைப் போன் பிதாவாங்
கற்றுணர்ந் தேதனது புகழாற் பிதாவைப்ர
காசஞ்செய் வோன் புத்திரன்
செல்வமிகு கணவனே தெய்வமென் றனுதினஞ்
சிந்தை செய்பவள் மனைவியாஞ்
சினேகிதன் போலவே யன்புவைத் துண்மைமொழி
செப்பு மவனே சோதரன்
தொல்வள மிகுந்தநூற் கரைதெரிந் துறுதிமொழி
சொல்லுமவ னேகு ரவனாஞ்
சொன்னநெறி தவறாமல் வழிபாடு செய்துவரு
துய்யனே யினிய சீஷன்
வல்விரக மிஞ்சுசுர குஞ்சரி யுடன்குறவர்
வஞ்சியை மணந்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 60

### சிறுமையிற் பெருமை

சேற்றிற் பிறந்திடுங் கமலமலர் கடவுளது
திருமுடியின் மேலி ருக்குந்
திகழ்சிப்பி யுடலிற் சனித்தமுத் தரசரது
தேகத்தின் மேலி ருக்கும்
போற்றியிடு பூச்சியின் வாயினூல் பட்டென்று
பூசைக்கு நேச மாகும்
புகலரிய வண்டெச்சி லானதேன் தேவர்கொள்
புனிதவபி டேக மாகும்
சாற்றிய புலாலொடு பிறந்தகோ ரோசனை
சவாதுபுழு கனைவர்க்கு மாஞ்
சாதியீ னத்திற் பிறக்கினுங் கற்றோர்கள்
சபையின்மேல் வட்ட மன்றோ
யாற்றிச் சுரத்தினை விபூதியா லுடல்குளிர
வைத்தமெய்ஞ் ஞான முதலே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 61

### செயத் தகாதவை

தானா சரித்துவரு தெய்வமிது வென்றுபொய்ச்
சத்தியஞ் செயல்வி டாது
தன்வீட்டி லேற்றிய விளக்கென்று முத்தந்
தனைக்கொடுத் தாலது சுடும்
ஆனாலு மேலவர்கண் மெத்தவுந் தனதென்
றடாது செய்யிற் கெடுதியா
மானைதான் மெத்தப் பழக்கமா னாலுஞ்செ
யாதுசெய் தாற்கொன் றிடும்
தீனான தினிதென்று மீதூண் விரும்பினாற்
றேகபீ டைகளே தருஞ்
செகராசர் சனுவென்ன வேலாத காரியஞ்
செய்தான் மனம்பொ றார்காண்
வானாடு புகழுமொரு சோணாடு தழையவிவண்
வந்தவ தரித்த முதலே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 62



### நடுவு நிலைமை

வந்தவிவ காரத்தி லினியபரி தானங்கள்
வருமென்று நேச ரென்றும்
வன்பகைஞ ரென்றுமய லோரென்று மிக்கதன
வானென்று மேழை யென்றும்
இந்தவகை யைக்குறித் தொருபக்ஷ பாதமோ
ரெள்ளள வுரைத்தி டாம
லெண்ணமுட னேலிகித புத்தியொடு சாக்ஷிக்கு
மேற்கச்ச பாச மதமாம்
முந்தவிரு தலையுஞ் சமன்செய்த கோல்போன்
மொழிந்திடிற் றர்மமது காண்
முனைவீம னுடல்பாதி மிருகந் தனக்கென்று
முன்றருமர் சொன்ன தலவோ
மைந்தனென வன்றுமை முலைப்பால் கொடுத்திட
வளர்ந்தருள் குழந்தை வடிவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 63

### பக்ஷ பாதம்

ஓரவிவ காரமா வந்தவர் முகம்பார்த்
துரைப்போர் மலைக் குரங்கா
முயர்வெள் ளெருக்குடன் முளைத்துவிடு மவரில்ல
முறையுமூர் பாழ் நத்தமாம்
தாரணியி லிவர்கள்கிளை நெல்லியிலை போலுகுஞ்
சமானமா வெழுபி றப்புஞ்
சந்தியி லாதுழல்வ ரவர்முகத் தினின்மூத்த
தையலே குடியி ருப்பாள்
பாரமிவ ரென்றுபுவி மங்கையு நடுங்குவாள்
பழித்ததுர் மரண மாவார்
பகர்முடிவி லேரவுர வாதிநர கத்தனு
பவிப்பரெப் போது மென்பார்
வாரமுட னருணகிரி நாதருக் கனுபூதி
வைத்தெழுதி யருள் குருபரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 64

### ஒன்றிலாமையாற் சிறவாதவை

கொங்கையில் லாதவட் கெத்தனைப் பணியுடைமை
கூடினும் பெண்மை யில்லை
கூறுநிறை கல்வியில் லாமலெத் தனைகவிதை
கூறினும் புலமை யில்லை
சங்கையில் லாதவர்க் கெத்தனை விவேகந்
தரிக்கினுங் கனதை யில்லை
சட்சுவை பதார்த்தவகை யுற்றாலு நெய்யிலாச்
சாதமுந் திர்த்தி யில்லை
பங்கய மிலாமலெத் தனைமலர்கள் வாவியிற்
பாரித்து மேன்மை யில்லை
பத்தியில் லாமல்வெகு நியமமா யர்ச்சனைகள்
பண்ணினும் பூசை யில்லை
மங்கைய ரிலாமனைக் கெத்தனை யருஞ்செல்வம்
வரினுமில் வாழ்க்கை யில்லை
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 65

### அளவுபடாதவை

வாரியா ழத்தையும் புனலெறியு மலைகளையு
மானிடர்கள் சனனத் தையும்
மன்னவர்க ணினைவையும் புருஷர்யோ
கங்களையும்
வானினுயர் நீளத் தையும்
பாரிலெழு மணலையும் பலபிரா ணிகளையும்
படியாண்ட மன்ன வரையும்
பருப்பதத் தின்னிறையு மீசுரச் செயலையும்
பனிமாரி பொழிது ளியையும்
சீரிய தமிழ்ப்புலவர் வாக்கிலெழு கவியையுஞ்
சித்தர்தம துள்ளத் தையுந்
தெரிவையர்கள் சிந்தையையு மிவ்வள வெனும்படி
தெரிந்தள விடக் கூடுமோ
வாரிச மடந்தைகுடி கொண்டநெடு மாலுக்கு
மருகனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 66



### பிறர்மனை நயத்தல்

தந்தார மன்றியே பரதார மேனினைவு
தனைவைத்த காமு கர்க்குத்
தயையில்லை நிசமில்லை வெட்கமிலை சமரினிற்
றைரியஞ் சற்று மில்லை
அந்தார மில்லைதொடர் முறையில்லை நிலையில்லை
யறிவில்லை மரபு மில்லை
யறமில்லை நிதியில்லை யிரவினிற் றனிவழிக்
கச்சமோ மனதி லில்லை
நந்தாத சனமில்லை யினமில்லை யெவருக்கு
நட்பில்லை கனதை யில்லை
நயமில்லை யிளமைதனில் வலிமையிலை
முத்திபெறு
ஞானமிலை யென்பர் கண்டாய்
மந்தார பரிமள சுகந்தாதி புனையுமணி
மார்பனே யருளா ளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 67

### மானம் விடாமை

கனபார மேறிற் பிளந்திடுவ தன்றியே
கற்றூண் வளைந் திடாது
கருதலர்க ளாலுடைந் தாலுமுயி ரளவிலே
கனசூர னமரின் முறியான்
தினமோ ரிடுக்கண்வந் துற்றாலும் வேங்கைதோல்
சீவனள விற்கொ டாது
திரமான பெரியோர் சரீரங்கள் போகினுஞ்
செப்புமுறை தவறி டார்கள்
வனமேறு கவரிமா னுயிர்போகு மளவுந்தன்
மயிரினொன் றுங்கொ டாது
வாராத வாபத்து வருகினுங் கற்புடைய
மாதுநிறை தவறி நடவாள்
மனதார வுனதடைக் கலமென்ற கீரற்கு
வன்சிறை தவிர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 68

## திருவருட் சிறப்பு

திருமகள் கடாக்ஷமுண் டானா லெவர்க்குஞ்
சிறப்புண்டு கனதை யுண்டு
சென்றவழி யெல்லாம் பெரும்பாதை யாய்விடுஞ்
செல்லாத வார்த்தை செல்லும்
பொருளொரு துரும்புமரி யாதையாஞ் செல்வமோ
புகல்பெருக் காறு போலாம்
புவியின்முன் கண்டுமதி யாதபேர் பழகினவர்
போலவே நேச மாவார்
பெருமையொடு சாதியி லுயர்ச்சிதரு மனுதினம்
பேரும்ப்ர திஷ்டை யுண்டாம்
பிரியமொடு பகையாளி கூடவுற வாகுவான்
பேச்சினிற் பிழைவ ராது
வருமென நினைத்தபொருள் கைகூடி வருமதிக
வல்லமைகண் மிகவு முண்டாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 69

## நட்பு நிலை

கதிரவ னுதிப்பதெங் கேநளின மெங்கே
களித்துள மலர்ந்த தென்ன
கார்மேக மெங்கே பசுந்தோகை யெங்கே
கருத்தினட் பான தென்ன
மதியமெங் கேபெருங் குமுதமெங் கேமுக
மலர்ந்துமகிழ் கொண்ட தென்ன
வல்லிரவு விடிவதெங் கேகோழி யெங்கே
மகிழ்ந்துகூ விடுத லென்ன
நிதியரச ரெங்கே யிருந்தாலு மவர்களொடு
நேசமொன் றாயி ருக்கு
நீதிமிகு நல்லோர்க ளெங்கிருந் தாலுமவர்
நிறைபக்ஷ மறவார்கள் காண்
மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவுசோ ணாட் டதிபனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 70



## கால மறிதல்

காகம் பகற்காலம் வென்றிடுங் கூகையைக்
கனகமுடி யரசர் தாமுங்
கருதுசய காலமது கண்டந்த வேளையிற்
காரிய முடித்து விடுவார்
மேகமுங் கார்கால மதுகண்டு பயிர்விளைய
மேன்மேலு மாரி பொழியும்
மிக்கான வறிவுளோர் வருதருண காலத்தின்
மிடியாள ருக்குதவு வார்
நாகரிக முறுகுயில் வசந்தகா லத்திலே
நலமென் றுகந்து கூவு
நல்லோர் குறித்ததைப் பதறாம லந்தந்த
நாளையின் முடிப்பர் கண்டாய்
வாகனைய காலைகன மாலைபுல் லெனுமுலக
வாடிக்கை நிச மல்லவோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 71

## இடனறிதல்

தரையதனி லோடுதேர் நீள்கடலி லோடுமோ
சலதிமிசை யோடு கப்பல்
தரைமீதி லோடுமோ தண்ணீரி லுறுமுதலை
தன்முன்னே கரி நிற்குமோ
விரைமலர் முடிப்பரமர் வேணியர வினைவெல்ல
மிகுகருட னாலா குமோ
வேங்கைக ளிருக்கின்ற காடுதனி லஞ்சாமல்
வேறொருவர் செல்ல வசமோ
துரைகளைப் பெரியோரை யண்டிவாழ் வோர்தமைத்
துஷ்டர்பகை யென்ன செய்யுந்
துணைகண்டு சேரிட மறிந்துசே ரென்றௌவை
சொன்னகதை பொய் யல்லவே
வரையுறு மாயனை யடுத்தலாற் பஞ்சவர்கள்
வன்போர் செயித்த தன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 72

### யாக்கை நிலையாமை

மனுநன்மாந் தாதாமு னானவர்க ளெல்லாரு
மண்மே லிருந்து வாழ்ந்து
மடியா திருந்தபே ரில்லையவர் தேடியதை
வாரிவைத் தவரு மில்லை
பனியதனை நம்பியே யேர்பூட்டு கதையெனப்
பாழான வுடலை நம்பிப்
பார்மீதி லின்னம்வெகு நாளிருப் போமென்று
பல்கோடி நினைவை யெண்ணி
அனிதமாய் விருதாவின் மாய்வதே யல்லாம
லன்பாக நின்ப தத்தை
யர்ச்சித்து முத்திபெறல் வேண்டுமென் றெண்ணார்க
ளாசைவலை யிற்சுழலு வார்
வனிதையர்கள் காம விகாரமே பகையாகு
மற்றுமொரு பகைமை யுண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 73

### வேட்டகத் திகழ்ச்சி

வேட்டகந் தன்னிலே மருகன்வந் திடுமளவின்
மேன்மேலு முபச ரித்து
விருந்துகள் சமைத்துநெய் பாறயிர் பதார்த்தவகை
வேண்டுவ வெலாம மைப்பார்
ஊட்டமிகு வர்க்கவகை செய்திடுவர் தைலமிட்
டுறுதியாய் முழுகு விப்பா
ரோயாது தின்னவே பாக்கிலை கொடுத்திடுவ
ருற்றநா ணாலாகி லோ
நாட்டமொரு படியிறங் குவதுபோன் மரியாதை
நாளுக்கு நாள்கு றைவுறும்
நகைசெய்வர் மைத்துனர்க ளலுவல்பார் போவென்று
நாணாமன் மாமி சொல்வாள்
வட்டமனை யாளொரு துரும்பாய் மதிப்பளவன்
மட்டியினு மட்டி யன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 74



### செல்வ நிலையாமை

ஓடமிடு மிடமது மணற்சுடுஞ் சுடுமிடமு
மோடமிக வேந டக்கும்
முற்றதோ ராற்றின்மடு மேடாகு மேடெலா
முறுபுனல்கொண் மடுவா யிடும்
நாடுகா டாகுமுயர் காடுநா டாகிவிடு
நவில்சகடு மேல் கீழதாய்
நடையுறு சந்தைபல கூடுமுட னேகலையு
நன்னிலவு மிருளாய் விடும்
நீடுபகல் போயபின் பிரவாகு மிரவுபோய்
நிறைபகற் போதாய் விடும்
நிதியோர் மிடித்திடுவர் மிடியோர் செழித்திடுவர்
நிசமல்ல வாழ்வு கண்டாய்
மாடுமனை பாரிசன மக்கணிதி பூஷணமு
மருவுகன வாகு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 75

### பிறந்தாற் பெறுபேறு

சடமொன் றெடுத்தாற் புவிக்குநல் லவனென்று
தன்பேர் விளங்க வேண்டுஞ்
சதிருடனி தல்லாது மெய்ஞ்ஞானி யென்றவ
தரிக்கவே வேண்டு மல்லால்
திடமினிய ரணசூர வீரனிவ னென்னவே
திசைமெச்ச வேண்டு மல்லால்
தேகியென வருபவர்க் கில்லையென் னாமலே
செய்யவே வேண்டு மல்லால்
அடைவுடன் பலகல்வி யாராய்ந்து வித்துவா
னாகவே வேண்டு மல்லா
லறிவான துரைமக்க ளாகவர வேண்டுமிவ
ரதிகபூ பால ரையா
வடகுவடு கிடுகிடென வெழுகடலு மலையெறிய
மணியுரகன் முடிக ணெறிய
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 76

## வேசை நிந்தை

தேடித்தம் வீட்டிற் பணக்காரர் வந்திடிற்
றேகசீ வன் போலவே
சினேகித்த வும்மையொரு பொழுதுகா ணாவிடிற்
செல்லுறா தன்ன மென்றே
கூடிச் சுகிப்பரென் னாசையுன் மேலென்று
கூசமா லாணை யிடுவார்
கொங்கையை வெடிக்கப் பிடிக்கக் கொடுத்திதழ்
கொடுப்பர் சும்பன முகப்பர்
வேடிக்கை பேசியே கைமுதல் பறித்தபின்
வேறுபட நிந்தை செய்து
விடவிடப் பேசுவார் தாய்கலக மூட்டியே
விட்டுத் துரத்தி விடுவார்
வாடிக்கை யாயிந்த வண்டப் பரத்தையர்
மயக்கத்தை நம்ப லாமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 77

## இதற்கிது உறுதியெனல்

கைக்குறுதி வேல்வின் மனைக்குறுதி மனையாள்
கவிக்குறுதி பொருள டக்கங்
கன்னியர் தமக்குறுதி கற்புடைமை சொற்குறுதி
கண்டிடிற் சத்ய வசனம்
மெய்க்குறுதி முன்பின் சபைக்குறுதி வித்வசனம்
வேசையர்க் குறுதி தேடல்
விரகருக் குறுதிபெண் மூப்பினுக் குறுதியூன்
வீரருக் குறுதி தீரம்
செய்க்குறுதி நீரரும் பார்க்குறுதி செங்கோல்
செழும்படைக் குறுதி வேழஞ்
செல்வந் தனக்குறுதி பிள்ளைகண கர்க்குறுதி
சேர்ந்திடுஞ் சர்ச்சனர்க ளாம்
மைக்குறுதி யாகிய விழிக்குற மடந்தைசுர
மங்கை மருவுந் தலைவனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 78



## வறுமையிற் சிறுமை

வறுமைதான் வந்திடிற் றாய்பழுது சொல்லுவாள்
மனையாட்டி சற்று மெண்ணாள்
வாக்கிற் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வந்து விளையும்
சிறுமையொடு தொலையா விசாரமே யல்லாது
சிந்தையிற் றைரிய மிலை
செய்யசபை தன்னிலே சென்றுவர வெட்கமாஞ்
செல்வரைக் காணி னாணும்
உறுதிபெறு வீரமுங் குன்றிடும் விருந்துவரி
லுயிருடன் செத்த பிணமா
முலகம் பழித்திடும் பெருமையோர் முன்புசென்
றொருவரொடு செய்தி சொன்னால்
மறுவசன முஞ்சொலார் துன்பினிற் றுன்பமிது
வந்தணுகி டாதருளு வாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 79

## தீச்சார்பா னனமையிழப்பு

ஆனைதண் ணீரினிழல் பார்த்திடத் தவளைசென்
றங்கே கலக்கி யுலவு
மாயிரம்பேர் கூடி வீடுகட் டிடிலேத
மறைகுறளு முடனே வரும்
ஏனைநற் பெரியோர்கள் போசனஞ் செயுமளவி
லீங்கிடந் திசை கேடதாம்
மின்பமிகு பசுவிலே கன்றுசென் றூட்டுதற்
கினியகோ னதுத டுக்கும்
சேனைமன் னவரென்ன கருமநிய மிக்கினுஞ்
சிறியோர்க ளாற் குறைபடுஞ்
சிங்கத்தை யும்பெரிய ருஷபத்தை யும்பகைமை
செய்ததொரு நரியல் லவோ
மானையுந் திகழ்தெய்வ யானையுந் தழுவுமணி
மார்பனே யருளா ளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 80

### இடையூறுற்றும் பயன்படுபவை

ஆறுதண் ணீர்வற்றி விட்டாலு மூற்றுநீ
ரமுதபா னங் கொடுக்கு
மாதவனை யொருபாதி கட்செவி மறைத்தாலு
மப்போது முதவி செய்வன்
கூறுமதி தேய்பிறைய தாகவே குறையினுங்
குவலயத் திருள்சி தைக்குங்
கொல்லைதான் சாவிபோய் விட்டாலு மங்குவரு
குருவிக்கு மேய்ச்ச லுண்டு
வீறுட னுதாரிதான் மிடியான போதினிலு
மிகநாடி வருப வர்க்கு
வேறுவகை யில்லையென் றுரையாதி யன்றள
வியந்துள மகிழ்ந் துதவுவான்
மாறுபடு சூரசங் காரகம் பீரனே
வடிவே லணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 81

### இன்னவர்க்கிது வில்லையெனல்

சார்பிலா தவருக்கு நிலையேது முதலிலா
தவருக் கிலாப மேது
தயையிலா தவர்தமக் குறவேது பணமிலா
தார்க்கேது வேசை யுறவு
ஊரிலா தவர்தமக் கரசேது பசிவேளை
யுண்டிடார்க் குறுதி நிலையே
துண்மையில் லாதவர்க் கறமேது முயல்விலார்க்
குறுவதொரு செல்வ மேது
சேர்விலா தவருக்கு மற்றுமொரு பயமேது
சுகமிலார்க் காசை யேது
துர்க்குண மிலாதவர்க் கெதிராளி யேதிடர்செய்
துஷ்டர்க் கிரக்க மேது
மார்புருவ வாலிமே லஸ்திரம் விடுத்தநெடு
மான்மருக னான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 82



### இதினுமிது நன்றெனல்

பஞ்சரித் தருமையறி யார்பொருளை யெய்தலிற்
பலர்மனைப் பிச்சை நன்று
பரிவாக வுபசார மில்லா விருந்தினிற்
பட்டினி யிருக்கை நன்று
தஞ்சவொரு முயலையடு வென்றிதனில் யானையொடு
சமர்செய்து தோற்ற னன்று
சரசகுண மில்லாத பெண்களைச் சேர்தலிற்
சன்னியா சித்த னன்று
அஞ்சலார் தங்களொடு நட்பா யிருப்பதணி
லரவினொடு பழகு வதுநன்
றந்தணர்க் காபத்தி லுதவா திருப்பதனி
லாருயிர் விடுத்த னன்று
வஞ்சக ருடன்கூடி வாழ்தலிற் றனியே
வருந்திடுஞ் சிறுமை நன்று
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 83

### நிலையாதவை

கொற்றவர்கள் ராணுவமு மாறுநே ராகிய
குளங்களும் தாசி யுறவுங்
குணமிலார் நேசமும் பாம்பொடு பழக்கமுங்
குலவுநீர் விளையா டலும்
பற்றலார் தமதிடை வருந்துவிசு வாசமும்
பழையதா யாதி நிணறும்
பரதார மாதரது போகமும் பெருகிவரு
பாங்கான வாற்று வரவும்
நற்றுமொரு துர்ப்புத்தி கேட்கின்ற பேருறவு
நல்லமத யானை நட்பும்
நாவினல் லுறவுமொரு நாள்போ லிராதிவைகள்
நம்பப் படாது கண்டாய்
மற்றுமொரு துணையில்லை நீதுணை யெனப்பரவும்
வானவர்கள் சிறை மீட்டவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 84

### நற்புலவர் தீப்புலவர்செயல்

மிக்கான சோலையிற் குயில்சென்று மாங்கனி
விருப்பமொடு தேடி நாடும்
மிடைகருங் காகங்க ளெக்கனி யிருந்தாலும்
வேப்பங் கனிக்கு நாடும்
எக்காலும் வரிவண்டு பங்கேரு கத்தினி
லிருக்கின்ற தேனை நாடு
மெத்தனை சுகந்தவகை யுற்றாலு முருள்வண்
டினந்துர் மலத்தை நாடும்
தக்கோர் பொருட்சுவை நயங்களெங் கேயென்று
தாம்பார்த் துகந்து கொள்வார்
தாழ்வான வன்கண்ணர் குற்றமெங் கேயென்று
தமிழிலா ராய்வர் கண்டாய்
மைக்காவி விழிமாது தெய்வானை யுங்குறவர்
வள்ளியுந் தழுவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 85

### தாழ்தற் பெருமை

வேங்கைகள் பதுங்குதலு மாமுகி லொதுங்குதலும்
விரிசிலை குனிந் திடுதலும்
மேடம தகன்றிடலும் யானைக ளொடுங்குதலும்
வெள்விடைக டுள்ளி விழலும்
மூங்கில்கள் வணங்குதலு மேலவ ரிணங்குதலு
முனிவர்க ணயந்து கொளலும்
முதிர்படை யொதுங்குதலும் வினைஞர்க
ளடங்குதலு
முதலினர் பயந் திடுதலும்
ஆங்கரவு சாய்குதலு மகிழ்மல ருலர்ந்திடலு
மாயர்குழல் சூடு படலு
மம்புவியி லிவைமாரி யங்களுக் கல்லாம
லதனா லிளைப்பு வருமோ
மாங்கனிக் காவானை வலமது புரிந்துவளர்
மதகரிக் கிளைய முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 86



### தெய்வச்செயல்

சோடாய் மரத்திற் புறாரெண் டிருந்திடத்
துறவுகண் டேவே டுவன்
றோலாம லவையெய்ய வேண்டுமென் றொருமனை
தொடுத்துவில் வாங்கி நிற்க
ஊடாடி மேலே யெழும்பிடி லடிப்பதற்
குலவுரா சாளி கூட
வுயரப் பறந்து கொண் டேதிரிய வப்போ
துதைத்தசிலை வேட னடியில்
சேடாக வல்விடந் தீண்டவே யவன்விழச்
சிலையிற் றொடுத்த வாளி
சென்றிரா சாளிமெய் தைத்துவிழ வவ்விரு
சிறைப்புறா வாழ்ந்த வன்றோ
வாடாம லிவையெலாஞ் சிவன்செயல்க ளல்லாதுன்
மனச்செயலி னாலும் வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 87

### பாட லியல்பு

எழுத்தசைகள் சீர்தளைக ளடிதொடைகள் சிதையா
திருக்கவே வேண்டு மப்பா
வீரைம் பொருத்தமொடு மதுரமாய் பளபளப்
பினியசொற் கமைய வேண்டும்
அழுத்தமிகு குறளினுக் கொப்பாக வேபொரு
ளடக்கமு மிருக்க வேண்டு
மன்பான பாவின மிசைந்துவரல் வேண்டுமு
ணலங்கார முற்ற துறையில்
பழுத்துள முவந்தோசை யுற்றுவரல் வேண்டும்
படிக்குமிசை கூடல் வேண்டும்
பாங்காக வின்னவை பொருந்திடச் சொற்கவிதை
பாடிற் சிறப்பென்பர் காண்
மழுத்தினஞ் செங்கதனில் வைத்தகங் காளனருள்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 88

### விபூதி வாங்குமுறைமை

பரிதனி லிருந்துமியல் சிவிகையி லிருந்துமுயர்
பலகையி லிருந்து மிகவே
பாங்கான வம்பலந் தனிலே யிருந்தும்
பருத்த திண்ணையி லிருந்தும்
தெரிவொடு கொடுப்பவர்கள் கீழ்நிற்க மேனின்று
திருநீறு வாங்கி யிடினுஞ்
செங்கையொன் றாலும்விரன் மூன்றாலும் வாங்கினுந்
திகழ்தம் மலத்தி னோடும்
அறியதொரு பாதையி னடக்கின்ற போதிலு
மசுத்தநில மான வதிலு
மங்கே தரிக்கிலுந் தந்திடிற் றள்ளினு
மவர்க்குநர கென்பர் கண்டாய்
வரிவிழி மடந்தைகு றவள்ளிநா யகிதனை
மணந்துமகிழ் சக நாதனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 89

### விபூதிதரிக்கு முறைமை

பத்தியொடு சிவசிவா வென்றுதிரு நீற்றைப்
பரிந்துகை யாலெ டுத்தப்
பாரினில் விழாதபடி யண்ணாந்து செவியொடு
பருத்தபுய மீதி லொழுக
நித்தமூ விரல்களா னெற்றியி னழுந்தலுற
நினைவாய்த் தரிப்ப வர்க்கு
நீடுவினை யணுகாது தேகபரி சுத்தமா
நீங்காம னிமல னங்கே
சத்தியொடு நித்தம்விளை யாடுவன் முகத்திலே
தாண்டவஞ் செய்யுந் திரு
சஞ்சலம் வராதுபர கதியுதவு மிவரையே
சத்தியஞ் சிவ னென்னலாம்
மத்தினிய மேருவென வைத்தமு தினைக்கடையு
மான்மருக னான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 90



### இவ்வுறுப்பாற் பயனில்லெனல்

தேவால யஞ்சுற் றிடாதகா லென்னகா
றெரிசியாக் கண்ணென்ன கண்
தினமுமே நின்கமல பாதத்தை நினையாத
சிந்தைதா னென்ன சிந்தை
மேவாக மஞ்சிவ புராணமவை கேளாமல்
விட்டசெவி யென்ன செவிகள்
விமலனை வணங்காத சென்னியென் சென்னிபணி
விடைசெயாக் கையென்ன கை
நாவார நினையேத் திடாதவா யென்ன வாய்
நற்றீர்த்த மூழ்கா வுட
னானிலத் தென்னவுடல் பாவியா கியசனன
நண்ணினாற் பலனேது காண்
மாவாகி வேலைதனில் வருசூரன் மார்புருவ
வடிவேலை விட்ட முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 91

### நற்பொருளொடு தீப்பொருள் பிறத்தல்

கோகனக மங்கையுடன் மூத்தவள் பிறந்தென்ன
குலவுமாட் டின்க ணவர்தான்
கூடப் பிறந்தென்ன தண்ணீரி னுடனே
கொடும்பாசி யுற்று மென்ன
மாகருணு மமுதினொடு நஞ்சம் பிறந்தென்ன
வல்லிரும் பிற்றுருத் தான்
வந்தே பிறந்தென்ன நெடுமரந் தனின்மொக்குள்
வளமொடு பிறந் தென்னவுண்
பாகமிகு செந்நெலொடு பதர்தான் பிறந்தென்ன
பன்னுமொரு தாய் வயிற்றிற்
பண்புறு விவேகியொடு கயவர்கள் பிறந்தென்ன
பலனேது மில்லை யன்றோ
மாகனக மேருவைச் சிலையென வளைத்தசிவன்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 92

### தன்னினத்தா லழிவு

குலமான சம்மட்டி குறடுகைக் குதவியாய்க்
கூறிரும் புகளை வெல்லுங்
கோடாலி தன்னுளே மரமது நுழைந்துதன்
கோத்திர மெலா மழிக்கும்
நலமான பார்வைசேர் குருவியா னதுவந்து
நண்ணுபற வைகளை யார்க்கு
நட்புடன் வளர்ந்தகலை மானொன்று சென்றுதன்
னவில்சாதி தனை யிழுக்கும்
உலவுநற் குடிதனிற் கோளர்க ளிருந்துகொண்
டுற்றாரை யீட ழிப்ப
ருளவனில் லாமலூ ரழியா தெனச்சொல்லு
முலகமொழி நிச மல்லவோ
வலமாக வந்தர னிடத்தினிற் கனிகொண்ட
மதயானை தன்சோ தரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 93

### வீணுக் குழைத்தல்

குயின்முட்டை தனதென்று காக்கையடை காக்குங்
குணம்போலு மீக்க ளெல்லாங்
கூடியே தாமுண்ண வேண்டுமென் றேதினங்
கூடுய்த்த நறவு போலும்
பயில்சோர ருக்குப் பிறந்திடத் தாம்பெற்ற
பாலனென் றுட் கருதியே
பாராட்டி முத்தமிட் டன்பாய் வளர்த்திடும்
பண்பிலாப் புருடர் போலும்
துயிலின்றி நிதிகளைத் தேடியே யொருவர்பாற்
றொட்டுத் தெரித்தி டாம
றொகைபண்ணி வைத்திடுவர் கைக்கொண்டு போகவரு
சொந்தமா னவர்வேறு காண்
வயிரமொடு சூரனைச் சங்கார மேசெய்து
வானவர்க் குதவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 94



### இதுசேரி னிது பயன்படாதெனல்

அழலுக்கு ளேவிட்ட நெய்யும் பெருக்கான
வாற்றிற் கரைத்த புளியு
மரிதான கமரிற் கவிழ்த்திட்ட பாலும்வரு
மலகைகட் கிடு பூசையும்
சுழல்பெருங் காற்றினில் வெடித்தபஞ் சும்மணற்
சொரிநறும் பனிநீரு நீள்
சொல்லரிய காட்டுக் கெரித்தநில வுங்கடல்
சுழிக்குளே விடு கப்பலும்
விழலுக் கிறைத்திட்ட தண்ணீரு முகமாய
வேசைக் களித்த பொருளும்
வீணருக் கேசெய்த நன்றியும் பலனில்லை
விருதாவி தென்பர் கண்டாய்
மழலைப் பசுங்கிள்ளை முன்கைமலை மங்கைதரு
வண்ணக் குழந்தை முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 95

### கைவிடத் தகாதவர்

அன்னைசுற் றங்களையு மற்றைநாண் முதலா
வடுத்துவரு பழையோ ரையு
மடுபகைவ ரிற்றப்பி வந்தவொரு வேந்தனையு
மன்பான பெரியோரை யும்
தன்னைநம் பினரையு மேழையா னவரையுஞ்
சார்ந்தமறை யோர் தம்மையுந்
தருணமிது வென்றுநல் லாபத்து வேளையிற்
சரணம் புகுந் தோரையும்
நன்னயம தாகமுன் னுதவிசெய் தோரையு
நாளுந் தனக் குறுதியாய்
நத்துசே வகனையுங் காப்பதல் லாதுகை
நழுவவிட லாகாது காண்
மன்னயிலு மினியசெஞ் சேவலுஞ் செங்கைமலர்
வைத்தசர வண பூபனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 96

### தகாத செயல்

அண்டிவரு முற்றார் பசித்தங் கிருக்கவே
யன்னியர்க் குதவு வோரு
மாசுதபு பெரியோர்செய் நேசத்தை விட்டுப்
பினற்பரை யடுத்த பேரும்
கொண்டவொரு மனையா ளிருக்கப் பரத்தையைக்
கொண்டாடி மருவு வோருங்
கூறுசற் பாத்திர மிருக்கமிகு தானமது
குணமிலார்க் கீய்ந்த பேரும்
கண்டுவரு புதியோரை நம்பியே பழையரைக்
கைவிட் டிருந்த பேருங்
கரிவாலை விட்டுநரி வால்பற்றி நதிநீர்
கடக்கின்ற மரியாதை காண்
வண்டடர் கடப்பமலர் மாலிகா பரணமணி
மார்பனே யருளா ளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 97

### நல்லோர் முறை

கூடியே சோதரர்கள் வாழ்தலா லுந்தகு
குழந்தைபல பெறுத லாலுங்
குணமாக வேபிச்சை யிட்டுண்கை யாலுங்
கொடும்பிதிர்க் கிடுத லாலுந்
தேடியே தெய்வங்க ளுக்கீத லாலுந்
தியாகங் கொடுத்த லாலுஞ்
சிறியோர்கள் செய்திடும் பிழையைப் பொறுத்துச்
சினத்தைத் தவிர்த்த லாலும்
நாடியே தாழ்வாய் வணங்கிடுத லாலுமிக
நல்வார்த்தை சொல்ல லாலு
நன்மையே தருமலாற் றாழ்ச்சிகள் வராவிவை
நல்லோர்கள் செயு முறைமைகாண்
வாடிமன நொந்துதமிழ் சொன்னநக் கீரன்முன்
வந்துதவி செய்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 98



### அடைக்கலங் காத்தல்

அஞ்சலெனு நாயினுட றருமன் சுமந்துமுன்
னாற்றைக் கடத்து வித்தா
னடைக்கல மெனுங்கயற் காகநெடு மாலுட
னருச்சுனன் சமர்புரிந் தான்
தஞ்சமென வந்திடு புறாவுக்கு முன்சிபி
சரீரந் தனைக் கொடுத்தான்
றடமலைச் சிறகரிந் தவனைமுன் காக்கத்
ததீசிமுது கென்பளித் தான்
இன்சொலுட னேபூத தயவுடைய ராயினோ
ரெவருக்கு மாபத்தி லே
யினியதஞ் சீவனை விடுத்தாகி லுங்காத்
திரங்கி ரக்ஷிப்ப ரன்றோ
வஞ்சகிர வுஞ்சமொடு தாருகன் சிங்கமுகன்
வளர்சூர னுடல் கீண்டவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 99

### யோக்கியா யோக்கியம்

பாலினொடு தேன்வந்து சேரில்ருசி யதிகமாம்
பருகுநீர் சேரி லென்னாம்
பவளத்தி னிடைமுத்தை வைத்திடிற் சோபிதம்
படிகமணி நோக்கி லென்னாம்
மேலினிய மன்னர்பால் யானைசேர் வதுகனதை
மேஷமது சேரி லென்னாம்
மிக்கான தங்கத்தி னவமணி யுறிற்பெருமை
வெண்கல் லழுத்தி லென்னாம்
வாலிப மினார்களுட னிளையோர்கள் சேரினலம்
வளைகிழவர் சேரி லென்னாம்
மருவுநல் லோரிடம் பெரியோர் வரிற்பிரியம்
வருகயவர் சேரி லென்னாம்
மாலிகை தரித்தமணி மார்பனே தெய்வானை
வள்ளிக்கு வாய்த்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 100

### பெரியோ ரியல்பு

அன்னதா னஞ்செய்தல் பெரியோர்சொல் வழிநிற்ற
லாபத்தின் வந்த பேருக்
கபயங் கொடுத்திடுத னல்லினஞ் சேர்ந்திடுத
லாசிரியன் வழி நின்றவன்
சொன்னமொழி தவறாது செய்திடுதல் தாய்தந்தை
துணையடி யருச்சனை செயல்
சோம்பலில் லாமலுயிர் போகினும் வாய்மைமொழி
தொல்புவியி னாட்டி யிடுதல்
மன்னரைச் சேர்ந்தொழுகல் கற்புடைய மனைவியொடு
வைக்கினுந் தாமரை யிலை
மருவுநீ ரெனவுறுத லிவையெலா மேல்வாத்
மாண்பென் றுரைப்ப ரன்றோ
வன்னமயின் மேலிவர்ந் திவ்வுலகை யொருநொடியில்
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேச னே. 101

### நூற் பயன்

வன்னமயி லேறிவரு வேலா யுதக்கடவுண்
மலைமே லுகந்த முருகன்
வள்ளிக் கொடிக்கினிய வேங்கைமர மாகினோன்
வானவர்கள் சேனா பதி
கன்னன்மொழி யுமையா டிருப்பு தல்வனரன்
கங்கைபெற் றருள் புத்திரன்
கணபதிக் கிளையவொரு மெய்ஞ்ஞான தேசிகக்
கடவுளா வினன்குடியி னான்
பன்னரிய புல்வயலில் வாலகும ரேசர்மேற்
பரிந்துகுரு பாத தாசன்
பாங்கான தமிழாசி ரியவிருத் தத்தினறை
பாடலொரு நூறு நாடி
நன்னயம தாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடொறுங் கற்ற பேர்கள்
ஞானயோகம் பெறுவர் பதவியாவும் பெறுவர்
நன்முத்தி யும் பெறுவரே. 102

குமரேசசதகம் முற்றிற்று



உ

# செந்தினாயக சதகம்

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

### காப்பு - கலித்தாழிசை

நந்தி யம்பரன் நயனச் சேய்மகிழ்
செந்தி னாயகச் சதகம் செப்பிட
இந்தி ரன்றவத் திரங்கி நீர்தரு
தந்தி மாமுகன் சரணங் காவலே. 1

### நூல். எழுசீர்

திருவருள் பொழியும் வதனமோ ராறும்
திறற்பெரும் புயங்களீ ராறும்
பருமலர்க் கமலம் பொருபதத் துணையும்
பகலினும் இலகவந் தருள்வாய்
கருமயிற் பரிமீ திருவர்க ளோடுங்
கடலுடைப் புவிவலம் வருவாய்
மருமலி யிதழித் தொடையணி பரமன்
மைந்தனே செந்தினா யகனே. 2

கள்ளையும் பழித்துக் கனிதமிழ் மதுரக்
கவித்திருப் புகழ்மிகக் கழறும்
கிள்ளையென் றெனைப்பல் கனவில்நீ வலிதிற்
கிளத்தியும் கெடுத்தனை யந்தோ
புள்ளைவாய் கிழித்த புனிதமால் மருகா
புலவர்கோன் மகளுயிர் போல்வாய்
வள்ளையஞ் செவிப்பார்ப் பதிமுலை நுகரும்
மைந்தனே செந்தினா யகனே. 3

ஆரணப் பொருள்முற் றுணர்ந்தவர் தமக்கும்
அரியதாஞ் சேவையொன் றருளிக்
காரணப் பிறப்பீ தென்னமுக் காலும்
கழறியுங் கவன்றனன் கண்டாய்

நாரணன் புகழும் நலமுடைக் குமரா
நறுந்தமிழ்க் குறுமுனிக் கினியாய்
வாரணத் துரிவை போர்த்தவர் பயந்த
மைந்தனே செந்தினா யகனே. 4

வெள்ளைநீர்ச் சடிலத் தமலனுந் தவள
வேலையிற் றுயிலுமா யவனும்
கள்ளவே தியனும் எனைத்தம துளத்திற்
கருதிடா நலம்பெறப் புரிவாய்
தெள்ளமிழ் துறழ்சொற் குறக்கொடி மருவும்
தினைப்புன முழுதினுந் திரிந்தாய்
வள்ளமே யனைய முலைத்துணைக் கவுரி
மைந்தனே செந்தினா யகனே. 5

கொங்கையங் குவடுங் கூர்விழிக் கயலும்
குளிர்மொழித் தேனொடு கொடுவந்(து)
அங்கையால் வலியத் தழுவுவார்க் குருகும்
அடியனேற் கருட்பெருக் களித்தாள்
சங்கையால் அலமந் திகல்பெரும் புலவோர்
சபையொரு மூன்றினுந் தழைத்தாய்
மங்கையோர் பாகத் திறையவர்க் கினிய
மைந்தனே செந்தினா யகனே. 6

புலைக்குணத் திகலோர் குலமறக் களையும்
புகழ்பெறப் போற்றுமென் றனக்கன்(று)
இலைக்குள்வைத் துளநீ றளித்தொரு மாற்றம்
இயம்பிய தில்லையோ இசையாய்
கலைக்குழு முழுதும் உணர்ந்தமெய்ப் புலவர்
கதிரயி லிலங்குதோட் கந்தா
மலைக்குலத் ததிபன் மகளெடுத் தணைக்கும்
மைந்தனே செந்தினா யகனே. 7

கொண்டலுங் காம தேனுவும் நாணுங்
கொடையுடைக் குமணனிற் கொடுக்கும்
தொண்டருக் களப்பின் மிடியும்ஏ னையர்க்குத்
தொலைவறு திருவுமேன் தொகுத்தாய்
புண்டரீ கத்தான் தலைகள்நான் கினுமுன்
புடைத்தமெய்ப் புகழ்பெறும் புனிதா



வண்டமிழ்ப் புலவன் விடுத்தது தானார்
மைந்தனே செந்தினா யகனே. 8

பொன்னியல் மேனிப் புரிகுழல் மடவார்
புணர்முலைப் போகமே கருதி
நின்னிய மங்கள் விழைகலார் போல
நீணிலத் துழலஏன் விடுத்தாய்
தென்னிய கொடும்பற் பேயினம் நடிக்கும்
செருக்களந் தொறும்புகழ் திறலாய்
மன்னிய அறமெண் ணான்குமுன் வளர்த்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 9

பழவினைப் பயன்றுய்த் தளவிலார் வாயிற்
படிதொறும் ஏறியெய்த் திரவா(து)
அழகிய தோகைச் சிகியில்நீ தோன்றி
ஆண்டுகொண் டருளும்நா ளுளதோ
கழகமோர் மூன்றும் அறிந்தமெய்ப் புலவா
கருநிறச் சமணர்வேர் களைந்தாய்
மழவிடைப் பரியிற் பவனிவந் தருள்வார்
மைந்தனே செந்தினா யகனே. 10

விதுவணி சடிலத் தினர்திரு வருளால்
மேதினி யிடத்தில்முன் விளங்கும்
சதுரரே யனைய ஒருவனைக் காணத்
தவம்புரிந் திளைக்கைகண் டிலையோ
பதுமனைப் புடைத்து முரகரிக் காழிப்
படையளித் தரற்குமெய் பகர்ந்தாய்
மதுரநா வலனுக் கடிசில்முன் சமைத்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 11

பால்வனப் பொடியும் பவளவான் கலையும்
பழுதறு கண்டிகை வடமும்
நால்வகை நெறியும் உடையமே லவர்தம்
நடுவிருந் துவக்குமாண் பருள்வாய்
சேல்விழிக் குறத்தி மருவிய பெருமைச்
செழுந்துவர்க் கிரிநிகர் புயத்தாய்
மால்விடை யெழுதும் கொடியுடைப் பரனார்
மைந்தனே செந்தினா யகனே. 12

பாரணங் கலமந் தழச்செயுங் கொடியோர்
படைப்பெருக் கறப்பொரும் பான்மை
வீரர்பற் பலரில் ஒருவனை யென்பால்
விடுப்பினும் விரும்புமா றுவப்பேன்
பூரவா கனத்துப் புனிதவெண் டிருமின்
போற்றிய புண்ணியப் பொருளே
மாரனப் பொடித்தார் மனங்கவர் குமரி
மைந்தனே செந்தினா யகனே. 13

கொல்லலே தொழிலா மெனமுயல் கொடியோர்
குலைகுலைந் தலமறக் குனிக்கும்
வில்லணி வீர வாகுவன் றுரைத்த
வியன்மொழிப் பயன்மிக விழைந்தேன்
பல்லவிக் கிசைந்த பதம்பக ரொருவன்
பங்கயக் கண்பெறப் பணித்தாய்
வல்லரக் கனையோர் விரல்கொடு நெரித்தார்
மைந்தனே செந்தினா யகனே. 14

போதினான் படைப்பும் உருவிலான் கணையும்
பொறையிலான் கணிச்சியும் பொருந்தா
நீதியால் உயர்ந்த புகழ்க்கவு மாரர்
நிறைதரும் அவையிலென் றடைவேன்
வாதிடுஞ் சமணர் குலமறக் களைவான்
வையையே டெதிர்செல விடுத்தாய்
மாதிரத் துயிர்கள் முழுமையும் பயந்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 15

தேன்மரு மலர்கள் தூவிநின் றிறைஞ்சும்
திருக்கைவேற் படைப்பெரும் பூசைக்(கு)
யான்மகிழ் வதுகண் டிருந்தும்நீ யிரங்கா
திருப்பது முறைகொலோ இயம்பாய்
கூன்மருப் பிலகு தவளவா ரணத்திற்
குருவெனக் குலவிய குகனே
மான்மழு வகலா மலர்க்கரத் தொருவன்
மைந்தனே செந்தினா யகனே. 16

சுந்தரி குமரி யெனுமிரு மடவார்
துயர்களைந் தணைந்தமை கருதி



வந்தடைந் தருமைத் தமிழ்கொடு துதிப்பேன்
மனங்கொதித் தயர்வது வழக்கோ
செந்தமிழ்க் குறுமா முனிக்கருள் புலமைச்
சிவகுரு நாதனாம் சிறுவா
மந்தர மனைய முலைப்பரா பரைதன்
மைந்தனே செந்தினா யகனே. 17

ஊன்றொகுத் தருந்தி உடல்வளர்ப் பவர்தம்
உவப்பறக் காண்பது கருதும்
நான்றொழ லறியா யெனில்அநா தியதாம்
நான்மறைச் சுருதிமெய்ப் படுமோ
தேன்றொடைக் கடம்பும் புனலியும் குரவுஞ்
செச்சையும் திகழ்ந்ததிண் புயனே
வான்றொடு குடுமி வரைச்சிலைக் கரத்தார்
மைந்தனே செந்தினா யகனே. 18

பங்கய மலரொன் றேந்திய கரத்துப்
பசுநிறப் பாவைநேர் குறத்தி
அங்கவ ணுரைத்த விதங்கரு திலையேல்
அவளுளம் அயர்வுறு மன்றோ
பொங்கழல் வேள்வித் தகரிவர்ந் தேழு
புவிகளும் பொன்றுறா தளித்தாய்
மங்கள கோலா கலச்சிவை யுதவு
மைந்தனே செந்தினா யகனே 19

கானவர் வளர்த்த கருங்குயி லனைய
கன்னிகை வசத்தன்நீ யென்பார்
நானறிந் தளவில் அப்படிக் கான
ஞாயமொன் றையும்நடத் திலையே
தானவக் குலத்துச் சூர்முதற் கொடியோர்
தமையெலாந் தகித்தவேற் றலைவா
வானவர் துயரஞ் சகித்திடா தழுதார்
மைந்தனே செந்தினா யகனே. 20

கயிலையிற் பரமர் நின்னிடங் கொள்ளுங்
களிப்பினிற் காணியா கிலும்நின்
அயிலையே பரவும் அடியனேன் மிசைநீ
அமைத்தினி தாள்வதற் கிரங்காய்

மயிலிவர்ந் துலகை வளைந்தொரு நொடியில்
மாங்கனி நிமித்தமுன் வந்தாய்
வயிரனூர் வாழ மயிடனைத் தடிந்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 21

கானிடைத் திரியும் புலியினும் கொடிய
கலியினாற் கலங்குறும் துயரம்
நானினிச் சகியேன் நனவொடு கனவில்
நவின்றவா றிக்கணம் நடத்தாய்
சூனியப் பொருளே பரமெனத் துணியும்
தொடக்கர்கண் காணருஞ் சொருபா
வானிறக் கேழல் மருப்பணி பெருமான்
மைந்தனே செந்தினா யகனே. 22

கரகமீ னியமா முனிமிசை வைத்த
கருணையிற் சிறிதெனக் குதவி
உரகநேர் சமணர் ஆதியர் வெருள
உறுக்கு மாண் புறும்படி புரிவாய்
குரகதக் குலங்கள் முழுமையும் நாணக்
கொழுந்தகர் நடத்திய குமரா
மரகத மேனி உமையவட் கினிய
மைந்தனே செந்தினா யகனே. 23

ஆசகல் பெரியோர் வகுத்தநூல் உணரேன்
ஆறெழுத் தாண்மையுங் குறியேன்
பாசநோய் தவிர்ந்த ஞானவா னந்தப்
பரமவீ டடைவதெப் படியோ
தேசவிர் கடப்ப மாலிகை யணிந்து
திரண்டபன் னிரண்டுதோட் செல்வா
வாசவ ருடலத் தெலும்பெலாம் புனைவார்
மைந்தனே செந்தினா யகனே. 24

ஓர்கணத் தெனினும் உனதருட் பெருஞ்சீர்
உணர்கிலா உலுத்தர்க ளுடன்சேர்ந்(து)
ஆர்கலி யனைய துயரமுற் றிடைதல்
அறிந்தும்நீ யிரங்கிலாய் அந்தோ
கூர்கவின் றருவேற் படையுடைக் குகனே
குக்குடப் புட்கொடி கொண்டாய்



வார்கடல் உலகுண் டுமிழ்ந்தவற் கிளையாள்
மைந்தனே செந்தினா யகனே. 25

செம்புகர் வேழப் பிடரின்மீ தேறிச்
செகந்தனி புரப்பினும் உன்னை
நம்புமாண் பிலரேல் அவரையோர் கொதுகா
நானினைப் பதுபிழை யாமோ
வெம்புலால் கமழும் விதிரிலைச் சுடர்வேல்
விகிர்தனே மேலவர்க் கிறைவா
வம்புலாங் கடுக்கைத் தொடையணி சடையார்
மைந்தனே செந்தினா யகனே. 26

மையல்நோய் மிகுத்து மறைநெறி தவறி
வருந்துறு மனத்தினேன் றனக்குன்
செய்யதா மரைப்பூந் திருவடி சூட்டித்
திருப்புகழ் தொடுக்குமாண் பருள்வாய்
பையரா வணையில் இருமட மாதர்
பாங்குறத் துயில்பவன் மருகா
வையமேழ் ஈன்ற வயிறுடைக் கவுரி
மைந்தனே செந்தினா யகனே. 27

பன்னிரு சமயப் பகுதியி னூடும்
பரந்தநின் றிருவருள் விழைந்தும்
மின்னியல் வடிவேற் பூசனை புரிந்தும்
மிகைபடும் வெருட்சியுற் றயர்ந்தேன்
சென்னியிற் குரவுஞ் செச்சையுங் கடம்பும்
செறிதரு சீருடைச் சிலம்பே
வன்னியும் அறுகும் இதழியும் முடித்தார்
மைந்தனே செந்தினா யகனே. 28

கிளர்சுவைத் தமிழால் அளவறும் பனுவல்
கிளத்திநின் திருவடிக் கணிந்தும்
தளவமென் முகையிற் குலவும்வா ணகையார்
தருமயற் பிணிதவிர்த் திலையே
களபமா முகத்துக் கடவுளோ டிகலிக்
கடலுடைப் புவிவலம் வந்தாய்
வளரொளிப் பாசாங் குசம்புனை கரத்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 29

சேலியல் விழியார் மயற்கொடும் பிணியாற்
செம்பொன்மால் மிகுத்துளந் தியங்கி
நூலியல் பறியார் தம்மொடு பிணங்கி
நுடங்கலென் றொழிகுவேன் நுவலாய்
கோலிய கடலுங் குன்றமு மரவும்
குலைவுறக் குறித்துவேல் விடுத்தாய்
வாலிய திருநீ றுடல்முழு தணிந்தார்
மைந்தனே செந்தினா யகனே. 30

மஞ்சறா மலய வரைக்குறு முனிவன்
மானத மனத்தடத் தலரும்
செஞ்சரோ ருகப்பூ வனையநின் துணைத்தாள்
சிரமிசை பரிக்குநாள் உளதோ
குஞ்சரிக் கினிய கணவனே ஏனற்
குறக்கொடி புணர்ந்ததோட் குகனே
வஞ்சகப் பண்டா சுரனுயிர் குடித்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 31

கலகமே விளைக்குங் கயவர்தம் வாயிற்
கடைதொறுங் கண்கலங் குறுவேன்
அலகில்சீர்ப் புலமைத் திறற்கவு மாரர்
அவையினூ டவிர்தர லென்றோ
திலகவா ணுதலார் இருவர்பங் கமரச்
சிகிமிசை யெங்கணுந் திரிவாய்
மலருடைப் பிரமர் தலைபல புனைவார்
மைந்தனே செந்தினா யகனே. 32

தந்திரத் தொழிலே பெரிதென மதித்துன்
றனதருட் பெருமையை யிகழும்
வெந்திறற் கொடியோர் குலமறக் களையும்
வீரரைக் காண்பதே விழைந்தேன்
சிந்திய மலர்ப்பைம் பொழில்மலி சாரற்
சிலம்பினந் தொறுநடம் புரிவாய்
மந்திரக் குடிலை வடிவமாம் ஒருத்தி
மைந்தனே செந்தினா யகனே. 33

கழுமல நகரிக் கவுணிய னனைய
கவிவலான் ஒருவனைக் காட்டி



யெழுதரு மறையி னெறிவழா தோங்க
லிடைத்திடா திருப்பதேன் இயம்பாய்
முழுதுணர் புலமைக் குருபர முருகா
மூவலில் சேவலங் கரத்தாய்
வழுதிகைப் பிரம்பால் நிறைந்தமை தெரித்தார்
மைந்தனே செந்தினா யகனே. 34

காணியு முனது திருவருட் செயலைக்
கருதிடாக் கயவரிற் கலங்கி
மாணிழந் தலைய விடுத்தனை அந்தோ
மயில்மிசை யொருதரம் வந்தாள்
சேணிடத் தமரர் சேனையி னதிபா
செழும்புனற் சரவணோற் பவனே
வாணியுந் திருவும் வழிபடு முமையாள்
மைந்தனே செந்தினா யகனே. 35

காமனும் நாணத் தகுமுன தழகே
கருத்திநுட் கவின்றரக் கருதிப்
பாமலர்த் தொடையும் வனைதரு மெனக்கோர்
பரிசுநீ யுதவுநாள் வருமோ
கோமளக் குறத்தி கரத்தினாற் பிசைந்து
கொடுத்தமா வருந்திய குழகா
மாமதத் தயிரா வணக்களிறு டையார்
மைந்தனே செந்தினா யகனே. 36

பல்லியங் கறங்கப் பாவலர் பாடப்
பண்ணவர் முனிவர்கண் டிறைஞ்ச
எல்லினும் பவனி வருமுனைக் குறியா
திசைந்தவா றெண்ணியிங் கிடைந்தேன்
கல்லினந் தோறும் நடம்புரி திருத்தாட்
கடவுளே கருணைவா ரிதியே
வல்லியங் கொடிநேர் இடைப்பரை மடியின்
மைந்தனே செந்தினா யகனே. 37

பாகுவுங் கசக்கத் தகுபெருஞ் சுவைசேர்
பசுந்தமிழ்ப் பனுவலார் பலர்க்கன்(று)
ஆகுலந் தவிரப் புரிந்தநீ யின்றென்
அளவுமேன் இரங்கிலாய் அந்தோ

மாகுணக் கடலே மரகதக் கலப
மயிற்பரி யுகைத்தவா னவனே
வாகுவென் றிருநாற் றிசையையுங் கொண்டார்
மைந்தனே செந்திநா யகனே. 38

ஓலைகொண் டெதிர்வந் துறுக்கும்வெங் குணத்தார்
உரம்நினைத் துள்ளுடைந் துன்கை
வேலையே துணையென் றிருக்குமென் றனைநீ
விடும்வித மென்கோலோ அறியேன்
மாலையும் கனலும் பவளமுங் கலந்த
வடிவுடைக் குருபரக் குகனே
வாலைமுற் பகர்மூ வகையுருக் கொள்வாள்
மைந்தனே செந்திநா யகனே. 39

கல்லினுங் கொடிய மனத்தினே னெனினும்
காசினி நின்னதா ளென்னும்
சொல்லினுக் குரியே னாகினேன் அதனாற்
றுயர்க்கடல் சுவறுமாண் பருள்வாய்
எல்லினங் குடியுற் றிருத்தலே போலும்
ஈரிரண் டங்கத மிசைத்தாய்
வல்லியப் புலித்தோ லரைக்கசைத் துள்ளார்
மைந்தனே செந்திநா யகனே. 40

தேறிய புலமைத் திறலுளார் மதியாச்
சிதடனேன் எனினும்நீ யென்பாற்
கூறிய மாற்றம் அனந்தமுண் டவற்றிற்
குவலய மறியவொன் றியற்றாய்
ஆறிரு கரத்தோர் பவளவான் பொருப்பே
அமலதே சிகர்க்கர சானாய்
மாறிலாக் கருணைப் பெருக்குறு கவுரி
மைந்தனே செந்திநா யகனே. 41

பொய்யினும் உனது திருவருட் பெருமை
புணர்தரப் புகல்வது மன்றி
மெய்யினுந் தவள நீறுமிக் கணிவேன்
விருப்பெலாம் வீண்படத் தகுமோ
கையினுங் கமலக் கழலினு மலருங்
கடப்பமா லிகைபுனை கந்தா



மையினுங் கறுத்த களமுடைப் பெருமான்
மைந்தனே செந்திநா யகனே 42

சீதவெண் மதியிற் றிகழும் நான்மருப்புச்
சிகரியிற் றிரிதரும் மகவான்
ஏதமுற் றொழித்த பெருமை கேட்டுனையே
யிலக்கெனக் குறித்தனன் கண்டாய்
போதனைப் புடைத்துச் சிறையிலிட் டளவில்
புவனமும் புதுக்கிய புனிதா
மாதரி கமல மலர்க்கர மகலா
மைந்தனே செந்திநா யகனே. 43

எள்ளலிற் சிறந்த சமணரா தியர்தம்
இகல்முழு தழிக்கும் வீறெய்தித்
தெள்ளலந் தமிழ்கொண் டுனைத்தினந் துதிக்கும்
சிறப்பெனக் களிப்பதற் கிரங்காய்
புள்ளலம் புறுசெங் கடம்பமா லிகையாய்
புகழ்பவர் விருப்பெலாங் கொடுக்கும்
வள்ளலார் நுதற்கண் மணியெனப் பிறந்த
மைந்தனே செந்திநா யகனே. 44

அகத்திய முனிவ னாதிய பெரியோர்
அவையினுக் கருகுசென் றிறைஞ்சி
இகத்தினும் பரத்தும் நிறைந்தமெய்ப் புகழ்ச்சீர்
எய்திட விரும்பலென் இயல்போ
நகத்திரள் தோறும் நடம்புரி பதத்தாய்
நக்கனைப் பகைத்ததோர் தக்கன்
மகத்தினைச் சுடலை யாகிடச் சபித்தாள்
மைந்தனே செந்திநா யகனே. 45

தடங்கடல் பொருநை யாதிய புனலும்
தழலுமுன் கவர்ந்தசெந் தமிழ்ப்பாட்(டு)
அடங்கலும் கொடுத்தாண் டருள்வலி உனக்கின்
றாயினும், அவ்வணம் பகராய்!
கடங்கலுழ் களிற்று மாமுகற் கிளையாய்
கனகனைக் கனன்(று) உயிர்குடித்த
மடங்கலைத் தடியச் சரபம தானார்
மைந்தனே செந்திநா யகனே. 46

சேல்கவின் றருகட் சிறுமியர் கனகச்
சிமிழ்முலை மறந்துநின் திருக்கை
வேல்களோ டுள்ள வியனெலாங் கருதி
மெய்யருட் பேறுறப் புரியாய்
கால்களாற் பொருது கூவிய பறவைக்
கையனே! கணத்திலோர் பத்து
மால்களைப் பயந்த மணிவிர லுடையாள்
மைந்தனே செந்தினா யகனே. 47

நீதமோர் சிறிதும் அறிகிலார்க் கஞ்சி
நெடிதுயிர்த் தலமரும் தமியேன்
பூதல முதலாம் உலகமோர் மூன்றும்
புகழும்வாழ் வுறுந்தின முளதோ
காதள வோடுங் கரியகட் குறத்தி
கணவனே கதிரயிற் கரத்தாய்
மாதவர் மடவார் மனங்கவர்ந் திரந்தார்
மைந்தனே செந்தினா யகனே. 48

நஞ்சுறை களத்துப் பரமனார் அருணை
நகரியின் சிகரியி லமர்ந்த
அஞ்சுகம் பகர்ந்த திருப்புகழ்க் கவியோ(டு)
அடியனேன் தமிழுமேன் றணிவாய்
கிஞ்சுகப் பதத்துக் குறமகள் பாகா
கிளர்தனி வேலுடைக் கிழவா
மஞ்சுறழ் கூந்தற் கவுரியீன் றெடுத்த
மைந்தனே செந்தினா யகனே. 49

ஆசுமுற் பகரும் கவியொரு நான்கும்
அறைபவர்க் கருள்செய்வா யென்னத்
தேசுறும் நின்றோள் மிசையுறுங் கிளிமுன்
செப்பிய சொற்பயன் தீதோ
வீசுதெண் டிரைநீர்ச் சாகரஞ் சுவற
விடுத்தவேல் விகிர்தனே! விடங்கால்
மாசுணப் பெருக்கைப் பணியெனப் புனைவார்
மைந்தனே செந்தினா யகனே. 50

விதிமர பினருட் சீரிய ராகி
விளங்கிய கிரிசுகந் தரர்மேற்



பதியும்நின் கருணைப் பெருக்கையோர் கோடி
பங்குவைத் தென்றனக் கருள்வாய்
பொதியைமா முனிவற் கருளிய கரத்தாய்
புலைத்தொழிற் பூரியர்க் கரியாய்
மதியினைக் கமலக் கழல்கொடு தேய்த்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 51

நால்வகை யோனிப் பிறப்பிலும் புகுந்து
நைவுறும் நாயினேன் றன்னைப்
பால்வழிந் தனைய அருவியம் பொதியைப்
பருப்பதத் தினனொடு பழக்காய்
கோல்வளைக் கரத்துக் குஞ்சரி பாகா
கொற்றவை வேற்படைக் குகனே
வால்வளைக் குழையார்க்(கு) உயிரினு மினிய
மைந்தனே செந்தினா யகனே. 52

சூதுகொண் டுலகைக் கெடுப்பவர் பகையாற்
றுயர்படும் தொடக்கெலாம் தொலைவான்
போதுகொண் டுனது வேற்படைப் பூசை
புரிவதும் அறிகிலாய் கொல்லோ
தீதுகொண் டவருந் திருவருள் கொள்ளச்
செயத்தகு சிவகுரு பரனே
வாதுகொண் டரனோ டாடிய வனிதை
மைந்தனே செந்தினா யகனே. 53

நயனுறப் பயிலும் வீணையங் கரத்து
நாரதன் மகத்தழல் நல்கும்
அயமதை அடக்கி ஆண்டநீ அடியேன்
அகத்தையேன் அடக்கிலாய் அந்தோ
புயனிறங் குலவும் நெடியமால் மருகா
பொருப்பெலாம் உடையவேல் முருகா
வயமலி சூலப் படையுடைப் பரமன்
மைந்தனே செந்தினா யகனே 54

வேதநூல் விரித்த வியாதமா முனிவன்
வியன்கிளி முகமுடைச் சுதனுக்(கு)
ஆதரத் தோடும் உரைத்தநின் பெருமை
அனைத்தும் நான் மறக்கிலேன் கண்டாய்

சீதளக் கடம்பும் செச்சையும் குரவும்
செறிந்தவிர் திருவடிக் குமரா
மாதளங் கனிநேர் முலைப்பரா பரைதன்
மைந்தனே செந்தினா யகனே. 55

திண்டிறற் புலவர் தம்மைவெல் பெருமை
திகழ்முசு குந்தனுக் கருளல்
கண்டியம் பினர்சொற் கேட்டெழு தினர்நூல்
கருதிநின் கழற்றுணை விழைந்தேன்
வெண்டிரு இறைஞ்சக் கலைமுழு துணர்ந்து
வியன்புகழ் பொறுத்தவித் தகனே
வண்டிசை பயிலும் ஆத்தியந் தொடையார்
மைந்தனே செந்தினா யகனே. 56

ஊழைவென் றுளமா முனிநடங் கண்ணுற்(று)
உறுதியால் முருகஎன் றுரைத்த,
ஏழைகை யிழந்து வருந்துமுன் சிகிமீ
திலங்கியாண் டருளிய திலையோ
பேழையிற் றிகழும் வயிறுடைக் களிற்றின்
பின்பிறந் துயர்ந்தபீ டுடையாய்
மாழையங் கிரிநேர் முலைத்துணைக் கவுரி
மைந்தனே செந்தினா யகனே. 57

ஈனமார் குதிரைத் தலைகொளும் அலகைக்(கு)
இளைத்திடைந் திறைஞ்சிய புலவன்
மானவேற் படையால் உய்ந்தன னெனஇம்
மகிதலம் பகர்வது வம்போ
பானலங் கருங்கட் குறமகள் பாகா
பன்னிரு கரத்தொரு பரனே
வானவ ருடலம் பொடிந்தநீ றணிந்தார்
மைந்தனே செந்தினா யகனே. 58

ஓகையோ டுருவம் கரந்தொரு கவியேற்(று)
ஒருகவி யுரைத்ததுண் டாகிற்
றோகைமா மயிலிற் றுலங்கியென் றனைநின்
தொழும்பரிற் கூட்டிடத் தகுமே
ஈகையிற் சிறந்த பன்னிரு கரத்தெம்
இறைவனே எஃகவே லுடையாய்



வாகைசேர் மடங்கற் பரித்திரி புரைதன்
மைந்தனே செந்தினா யகனே. 59

தாமதக் குணத்துக் கயவர்பால் இரந்து
தவிக்குமென் றன்னைநீ தடுத்தாண்(டு)
ஏமமும் பொழியும் ஒருமுகி லெனப்பா
ரிடத்தினிற் குலவவைத் தருள்வாய்
பாமலர்த் தொடையற் சுவையொடு மணமும்
பருகிய பன்னிரு செவியாய்
வாமபா கத்தோர் மடந்தைவைத் தவர்தம்
மைந்தனே செந்தினா யகனே. 60

இட்டுணா லோபர் தம்மையும் பொருளாம்
எனமதித் தின்றமிழ்க் கவிதை
கொட்டுவார் குழுவிற் கூடிநெஞ் சயரும்
கொடுமைதீர்ந் துய்யும்நா ளுளதோ
திட்டுவார் தமக்குந் திருவருள் வழங்கும்
தெய்வமாஞ் சிவகுரு பரனே
மட்டுலாங் கரிய கூந்தலம் புவனை
மைந்தனே செந்தினா யகனே. 61

மிகுத்துள பொருளைப், பூமியை, மின்போல்
விளங்கிழை மாதரை, மேவிப்
பகுத்துமிஞ் சினர்பால் இரந்தலைத் திளைக்கும்
பருவரற் றவிர்க்கஇன் றிரங்காய்
செகுத்துவெஞ் சூர்மா வேர்களைந் தமரர்
தியக்கறச் செய்தவே லவனே
வழுத்திடும் எழுநான் காகமம் உடையார்
மைந்தனே செந்தினா யகனே. 62

பொன்னகர்க் கிறைவ னாதியர் தாமும்
புகழஇப் பூமியிற் றிகழ்வுற்(று)
உன்னடித் துணையிற் கலப்பதே விழைந்தீண்(டு)
உருகுவ தறிகிலாய் கொல்லோ
பன்னகத் தரசும் நடுக்குறக் கூவும்
பசியமா மயிலிவர் பரனே
வன்னமே கலைப்பார்ப் பதிமடிக் கழகாம்
மைந்தனே செந்தினா யகனே. 63

கோணல்வெண் பிறைக்கோட்(டு) இபமிசைக் குலவிக்
குவலயம் புரப்பவர் வாழ்வும்
ஏணலவெ னக்கண் டிகழ்ந்தும்நின் னடிமை
யெனும்பெயர் விழைந்துளேன் கண்டாய்
பூணணி களப முலைமினா ரிருவர்
புணர்ந்ததோட் பொருப்புடைப் புனிதா
வாணனா தியர்க்கும் வரமிகக் கொடுத்தார்
மைந்தனே செந்தினா யகனே. 64

இரைக்கலைந் திளைக்கும் ஈனரு டொருவன்
எனப்புவி யிகழ்தல்முற் றொழித்துக்
கரைக்கடங் கரும்பே ரின்பவா ரிதியின்
களிப்பெனக்(கு) அளிக்கும்நா ளுளதோ
குரைக்கும்நாய் நரியொத் தூன்மிகப் பருகும்
கொள்கையோ ருணர்வருங் குகனே
வரைக்குலம் பரவு(ம்) மேனைபால் வளர்ந்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 65

சதுமுகப் பிரமன் சிருட்டியா தியவாச்
சாற்றுமுத் தொழில்களாற் றயங்கல்
கதுமெனத் தவிரக் கருணையா றொழுகுங்
கடைக்கணாற் சற்றெனைப் பாராய்
பொதுமுத லாயே யிருந்து(ம்) மெய்யடியார்
புந்தியிற் சொந்தமு மாவாய்
மதுரையிற் சங்கப் பலகையொன் றமைத்தார்
மைந்தனே செந்தினா யகனே. 66

சயிலமெங் கணும்நின் றொழும்பரோ டேகிச்
சந்ததம் நின்புகழ் பாடி
வெயில்நில வெறிக்கும் இடந்தொறுந் திகழும்
மெய்ப்புகழ் பெற்றிட விழைந்தேன்
அயிலணி தடந்தோள் ஆறிரண் டுடையாய்
அறுமுகத் தொருபரம் பொருளே
மயில்பொரு சாயற் பகவதி பயந்த
மைந்தனே செந்தினா யகனே. 67

பகருமுன் புளிய மரக்கிளை தெறித்துப்
பாரினில் விழும்படி பார்த்தோன்



நிகர்பலர்க் களித்த பெருமையிற் சிறிது
நீயெனக் கருள்வதெப் பொழுதோ
தகரமுண் டிருண்ட கூந்தலஞ் சசிதன்
தமநிய மங்கலம் புரந்தாய்
மகரகே தனனைத் தகித்தகண் ணுடையார்
மைந்தனே செந்தினா யகனே. 68

தேந்தமிழ்ப் புலமைச் சிரம்பொரு மதுரத்
திருப்புகழ் தொடுத்தவர் சிலரு(டு)
ஆந்தகை பொறுத்தும் அடியனேன் இவ்வா(று)
அலமரத் தகுங்கொலோ அறையாய்
காந்தளின் மலர்நேர் கரத்தினாற் குறத்தி
கள்ளுடன் பிசைந்தமா அயின்றாய்
மாந்தளிர் மேனிச் சிவைமுலை பருகும்
மைந்தனே செந்தினா யகனே. 69

உனைமிக விரும்பித் துதிக்குமோர் புலவன்
உறுகணுற்(று) ஊரவர் தம்மாற்
பினைவரத் திரும்பிப் பார்த்(து)அவன் புகழைப்
பெருக்கிய பெற்றியெங்(கு) ஒளித்தாய்
அனையினைத் திருக்கை வேற்படை யாக்கி
அணிந்துநின் றாடிடும் அரசே
மனைவியைப் பாதி யுடலில்வைத் திருப்பார்
மைந்தனே செந்தினா யகனே. 70

பெறுதலுக் கரிய பேறுபெற் றுயர்ந்த
பிரபுட தேவனுக் கிருகண்
இறுதியுற் றிடச்செய் தொருவன்வேண் டுதலால்
ஈந்தமை கருதியும் இடைந்தேன்
அறுமுகத் தொருவா ஆறிரு கரத்தெம்
அண்ணலே அமுதவா ரிதியே
மறுவில்பே ரருட்கற் புடையபார்ப் பதிதன்
மைந்தனே செந்தினா யகனே. 71

ஆனியில் பெருமைச் சிகரியொன் றியற்றும்
அருந்தவற் கம்பொன்மிக் கருளி
மாநிலத் திடையோர் வன்னமு மெடுக்கும்
வகையுரைத் திட்டதும் வம்போ

கூனிய தவளமருப் பின்வெங் களிற்றைக்
குன்றொடு தடிந்தவேற் குகனே
வானிறக் கயிலைக் கிரியுடைப் பெருமான்
மைந்தனே செந்தினா யகனே. 72

கழைமலி பழன மதுரைமா நகர்க்கோன்
கன்னிதன் கற்கிமா முகம்போய்
உழைவிழிக் கமல மலர்நிகர் வதனம்
உறச்செயும் உண்மைபொய்த் திடுமோ
தழைசெவிக் களிற்று மாமுகற் கிளைய
தம்பிரா னெனில்மகிழ் தகையாய்
மழைபொரு கருணைத் திருமுகத் துமையாள்
மைந்தனே செந்தினா யகனே. 73

தங்கணத் தொருவ னெனக்குறித் திகலித்
தனையடித் தவனிரு கரமும்
கங்கணம் புனையப் புரிந்தநின் கருணைக்
கடலினைக் கருதிலேன் கொல்லோ
வெங்கணத் தொகுதி சூழநின் றாடி
வீடுதோ றிரப்பினும் விரும்பும்
வங்கண னாகத் தனதனைக் கொண்டார்
மைந்தனே செந்தினா யகனே. 74

இல்லையென் றிரக்குஞ் சளமுழு தொழிந்தீண்
டிரப்பவர்க் கீபவ னெனுமோர்
சொல்லையும் புனையக் குறித்துநான் வருந்துந்
துயருணர்ந் திரங்கிலா யந்தோ
குல்லையந் தொடையற் குருபரக் குகனே
குறிச்சிதோ றிலகிய குருந்தே
வல்லைவென் றொளிரு முலைப்பரா பரைதன்
மைந்தனே செந்தினா யகனே. 75

ஓர்பொழு தேனும் உனைக்கரு திலர்போன்
றுழலுமென் னுள்ளகத் துன்னும்
சீர்பெறப் புரிய வல்லையோ அலையோ
தெரிதரச் செப்பினும் நலமே
வார்புவி முழுது மளந்தயின் றுமிழ்ந்த
மாயவன் மனமகிழ் மருகா



மார்பினி லாமைக் கோடுமொன் றணிந்தார்
மைந்தனே செந்தினா யகனே. 76

திலகவா ணுதலார்க் குருகுநெஞ் சுடைய
சிதடனேன் றன்னையும் சிலர்நின்
அலகில்சீர் பகரும் அருந்தமிழ்ப் புலவ
னாமெனப் புரிந்தவ னாரோ
இலகுதன் னெழில்கண் டுள்ளகத் தேங்கும்
இயக்கர்கோன் வெள்ளியோ டிணைய
மலர்விழி யொன்றைக் கெடுத்தபாங் கினள்கை
மைந்தனே செந்தினா யகனே. 77

வேதநான் முகனைப் புடைத்தநின் புகழே
விழையுமென் வினைப்பிணி மீறிச்
சாதலிற் கொடிய துயர்க்கடல் விளைக்கத்
தகுங்கொலோ சற்றருள் புரிவாய்
சீதவா ரிசத்தாட் சிலம்பினஞ் சிலம்பச்
சிலம்புதோ றாடிய சிறுவா
வாதவூர் முனிசொற் றமிழ்க்கவி வரைந்தார்
மைந்தனே செந்தினா யகனே. 78

களவிலா மனத்துப் பெரியவர் புடையிற்
கலந்துறுங் களிப்பினைக் காட்டி
அளவறு மதுரத் தமிழ்க்கவி பொழியும்
ஆண்மையும் அடியனேற் கருள்வாய்
உளமதிற் கருதும் அக்கணந் தீம்பால்
ஒழுக்கிய முலையின ளான
வளவர்கோன் பாவைக் கொல்கிய உமையாள்
மைந்தனே செந்தினா யகனே. 79

பூணினைப் பனுவற் புலவனுக் கருளிப்
பொருள்கொடுத் ததைத்திருப் பெனத்தன்
தாணினைத் துருகும் ஒருவனோ டுரைத்த
தனித்தொழி லினிச்செயத் தகாதோ
கோணிய பிறைச்செஞ் சடைமுத லாய
கோலமுற் றுன்னிய குணஞ்சேர்
மாணியார் நிமித்தம் மறலியைத் தடிந்தார்
மைந்தனே செந்தினா யகனே. 80

செந்தரை வரகாற் சமைத்துள களியுந்
தேனுமோர் பொருளெனக் கருதி
முந்தவோ ரிருவர் காணவும் நடித்த
முதிரருள் மறைந்ததோ மொழியாய்
கந்தநாண் மலர்க ளாகிய கணையும்
கன்னலஞ் சிலைமுதற் பிறவும்
மந்தமா ருதத்தேர் மதனனுக் களித்தாள்
மைந்தனே செந்திநா யகனே. 81

பொழிதமிழ்த் தொடையால் அளவற வனைந்துன்
பொன்னடித் துணைகளிற் புனைந்தும்
கழிபட வைத உழத்தியார்க் களித்த
கருணையுங் கண்டிலே னந்தோ
விழிமலர். மூவா றுடையவே தியனே
விண்ணுளார்ப் புரந்தவே லவனே
வழிபடு மொருவற் கமுதிரந் தளித்தார்
மைந்தனே செந்திநா யகனே. 82

அதிர்தொனிப் பேரி உதவியாற் கால
மறிந்துனை வழிபடு மவன்ஓர்
முதிரொளிக் கமல விழிதர ஒருவன்
முன்பெறச் செய்ததும் பிழையோ
துதிபகர் பனவன் கனலிடை வீழ்ந்து
துஞ்சுறா நிமித்தமே துணிந்து
மதியமா வாசை தனில்வரப் புரிந்தாள்
மைந்தனே செந்திநா யகனே. 83

மந்திர நகரில் மருமகன் வீர
வாகுவால் வரும்படி வருத்தி
உந்திய மணிநா வறுங்கவி படித்தோன்
உறுந்திறல் எனக்குத வுவையே
செந்திரு மகளும் மணியொடு துளவும்
திகழுமார் பினன்புகழ் செல்வா
வந்திதன் ஆளாய் வைகையா றடைத்தோன்
மைந்தனே செந்திநா யகனே. 84

அங்குநின் னடிமைத் திறலுடைப் பனவர்
அருகுறத் துயில்நல மமைந்த



கங்குலிற் பகர்ந்த வாசகம் பிழைத்தாற்
கடையனேன் களிக்குமா றுளதோ
செங்குணக் கடலே திருவருட் சுடரே
தெய்வநா யகச்சிவ குருவே
மங்குறா தென்றும் வளரருட் பரைதன்
மைந்தனே செந்திநா யகனே. 85

கோளினந் தொடர்ந்து வருத்தலாற் றமியேன்
குலைகுலைந் தலைவது குறித்து
நீளியற் கலப மயிலின்மீ தொருக்கால்
நிலவியாண் டருள்செய நினைவாய்
காளிகோ வெனவீழ்ந் தலறிட இடித்த
கரத்தினான் விழைந்தபொற் கழலாய்
வாளியா மென்ன மாயனைச் சமைத்தார்
மைந்தனே செந்திநா யகனே. 86

எண்ணருங் கவலைப் பிணியினால் மெலிவுற்
றேங்குறும் ஏழையேன் றனைநின்
தண்ணளிக் கடலினி டைமுழுக் காட்டுந்
தருணமொன் றுள்ளதோ சாற்றாய்
பண்ணவர் சேனைக் கதிபனா முன்னம்
பாரிடச் சேனைகொண் டிருந்தாய்
வண்ணவாய்க் கரிய குயில்நிக ருமையாள்
மைந்தனே செந்திநா யகனே. 87

சொல்லரும் பனுவற் றொகையெலாம் பகரும்
துணிவுடைப் புலவரைத் தொடர்ந்து
வெல்லவுங் கருதும் வீணரை மதியா
விறலெனக் குதவும்நாள் உளதோ
கல்லகந் தோறும் கமழ்தரு கமலக்
கழலுடைக் கந்தனே கடல்சூழ்
மல்லலம் புவித்தேர் நடத்திய சிவனார்
மைந்தனே செந்திநா யகனே. 88

மலக்கொடும் பிணிமூன் றுளதெனத் தெளியா
மயக்குறும் வஞ்சர்தம் பகையால்
கலக்கமுற் றிடையும் கடையனேன் மனமும்
களிப்புறக் கருணைசெய் குவையோ

இலக்கறப் பெருத்த பாரினைச் சுமக்கும்
ஈடுள மாசுணத் தரசை
வலக்கையின் வீரற்சிற் றாழியாப் புனைவாள்
மைந்தனே செந்தினா யகனே. 89

ஓடைமால் களிற்றின் உலவுபல் பகைஞர்க்
கொருபெரு மடங்கலே றொத்துக்
கோடைவான் இடியிற் குமுறிவென் றுயர்சீர்
கொடுத்திட வல்லையென் றடுத்தேன்
ஆடையா மெனஎண் டிசையையு மணிந்தும்
அமரர்தம் நிமித்தம்அம் பிகைமுன்
மாடையம் பலத்தில் நடம்புரி பெருமான்
மைந்தனே செந்தினா யகனே. 90

காயக மனத்துக் கடையரை மதித்துக்
கவிபல கழறியும் துதிக்கும்
பேயரோ டிகலித் திரியுமென் றனக்கோர்
பெருமையென் றருள்வையோ பேசாய்
தூயவா ணகைக்குஞ் சரிபுணர் கணவா
துதிக்கைமா முகத்தினன் றுணைவா
மாயனுஞ் சிவையு மாகிய ஒருத்தி
மைந்தனே செந்தினா யகனே. 91

ஏழ்வகைப் பிறவித் துயரினுக் கஞ்சி
யிடையறா துன்னையே யெண்ணித்
தாழ்வொருங் கொழிக்கத் தகுமெழுத் தாறே
சதமெனப் பகரும்வீ றருள்வாய்
பாழ்வினைச் சளந்தீர்ந் துய்யவேண் டினர்க்கும்
பயன்பல குறித்தபத் தருக்கும்
வாழ்வெலாம் உதவத் தக்கபாண் டரங்கன்
மைந்தனே செந்தினா யகனே. 92

காவிமா மலர்க்கட் சிறுமியர் மயலாற்
கலங்குமென் கருத்தினைத் திருத்தி
ஆவியைத் திருத்தாட் டுணையுடன் கலந்தாண்
டருளினின் புகழ்க்கழ கன்றோ
தாவில்மெய்த் தவத்து மலையரசு சுவக்கத்
தகுசிறு தனையளாய்த் தடநீர்



வாவியின் கமலப் பொகுட்டின்மீ தவிர்ந்தாள்
மைந்தனே செந்தினா யகனே. 93

பாகசா தனன்முற் பகர்பல தேவர்
பருவரல் முழுமையுந் தவிர்ப்பான்
வேகவெஞ் சூர்மா முதலினர்த் தடிந்த
வெற்றிவேற் புகழ்மிக விழைவேன்
ஏகதத் துவனே எவ்வெவ ரெண்ணத்
தெவ்வண மவ்வண மிருப்பாய்
மாகமே வழியா வரும்விடைப் பரியார்
மைந்தனே செந்தினா யகனே. 94

குற்றமெங் கணும்போய் நின்றிருப் புகழே
கூறிவெங் கொலைத்தொழி லினரை
வென்றரு ளாடல் விளைக்குமெய்த் திறமை
விரைந்தெனக் கருளவல் லாயோ
மின்றயங் கியவேல் விகிர்தனே யனந்தம்
வெற்பனே விடைப்பரி யுடையார்
மன்றகத் தாடல் காணுமம் பிகைதன்
மைந்தனே செந்தினா யகனே. 95

கூரிய தனிவேற் குமரனே முதன்மைக்
குருவெனச் சந்ததங் கூறும்
ஆரிய முனிவோர் புடையினிற் கூடி
அருட்கடல் குளிப்ப தென்றறையாய்
சீரிய அமரர் புடையமு தலறித்
தியக்குற மாசுணஞ் சிதறும்
வாரியின் விடமுற் றயின்றவாய்ப் பரமன்
மைந்தனே செந்தினா யகனே. 96

பதனமா மனத்தைத் தடுத்துடல் முழுதும்
பழுதில்வெண் ணீறுமிக் கணிந்து
புதனல ரியைநேர் புலமையுற் றுனது
பொன்னடி போற்றும்வாழ் வருள்வாய்
மதனவேள் கண்டு தன்னுருக் கரக்க
வயங்கெழில் மலிந்தசண் முகனே
வதனமா யிரங்கொண் டுலவிய பெரியாள்
மைந்தனே செந்தினா யகனே. 97

கடகரி முகவன் வயிரவன் காளி
    கலதியன் னவரென்மேற் கனன்று
விடஅரி யெனவந் துறுக்குநாள் உனது
    மெய்யருள் வென்றதோர்ந் திலனோ
புடவியில் வானிற் பிலத்தினில் உள்ளார்
    புகல்பல தேவரு மாவாய்
வடநிழ லதனில் மருவுதே சிகனார்
    மைந்தனே செந்தினா யகனே. 98

தீயையு முறுக்குந் திறற்கரி முகனைச்
    சிங்கனைச் சூரனைச் செற்றாய்
தாயைவேற் படையாய்த் தரித்தனை தமியேன்
    றவப்பயன் தரச்சிறி திரங்காய்
வேயைவென் றவிர்தோள் மடந்தையர் பலராய்
    மேதினி விளக்கியும் விளங்கா
மாயையு மாகி அருளுமாய் நிறைந்தாள்
    மைந்தனே செந்தினா யகனே. 99

முழங்குமுத் தமிழ்ச்சொற் பாடலுக் கினிய
    மூர்த்திநீ யென்றுணர்ந் தடைந்தும்
கழங்குடைக் கரத்தார் ஆதியே டணையாற்
    கலங்குற வொழிந்திலேன் கண்டாய்
கிழங்குதேன் தினைமா உணக்கொடுத் துருக்கும்
    கிளிமொழிக் குறமகள் கேள்வா
வழங்குவ அனைத்து மாகியும் ஆகார்
    மைந்தனே செந்தினா யகனே. 100

நிறையுமெய் யுணர்ச்சி யின்றிய என்பால்
    நீயுரைத் தவையெலாம் நிசமேற்
குறைவறு பரமா னந்தவா ரிதியிற்
    குளிப்பதுண் டென்னவே குறித்தேன்
சிறைதவிர்த் தமரர் தமைப்புரந் தாண்டாய்
    சிலம்பின மெங்கணும் சிறந்தாய்
மறைநெறிச் சமயந் தொறுந்திக ழொருதாய்
    மைந்தனே செந்தினா யகனே. 101



## நூற்பயன்

தூய வேதியர் புடைமிகப் பெருகலாற்
    றுலங்கெழிற் றிருச்செந்தில்
நாய கன்புயத் தணிதரு கடம்புறழ்
    நறுந்தமிழ்ச் சதகத்தை
ஆய வல்லவர் அநுதினந் துதிப்பவர்
    அனையவ ரனைவோரும்
மாய னாமெனப் புவியிலுற் றரனென
    வானகத் தவிர்வாரே. 102

**செந்தினாயக சதகம் முற்றிற்று**

உ

# திருச்செந்தில்
# முருகன் சந்நிதிமுறை
## முருகைய பங்கஜாக்ஷி
## முத்தம் வேண்டல்

**('பற்றற் றார்சேர்' என்னும் தேவாரப்பண்)**

**பண்: பழம்பஞ்சுரம் (சங்கராபரணம்)**

எந்தந் தவமே எழிற்குமரா
இணையே துமிலா இன்னமுதே
பந்தந் தவிர்க்கும் பரஞ்சுடரே
பரையின் சுதனே பாவலனே
உந்துந் திரைகள் சிதறுமுத்தால்
ஒளிரும் செந்தில் உத்தமனே
கந்தங் கமழும் கனிவாயால்
கந்தா முத்தந் தந்தருளே. 1

மலையே நிகரென் மயல்மாய்த்து
மகவாய் வந்தே மலர்வித்தாய்
சிலைவே டர்குலக் கொடியுடனே
சிறக்கும் செந்திற் சிவபாலா
விலையே இலதோர் விண்மணியே
வேத நாலின் முடிமணியே
கலையே உன்றன் கனிவாயால்
கந்தா முத்தந் தந்தருளே. 2

பெரும்பே தையெனை உன்தாயாய்ப்
பேணி யாண்டாய் பிரியமுடன்
அரும்பே என்றன் அகத்தமர்ந்த
அழகே ஆடும் மயில்வீரா



பெரும்பே ரரசே பெறற்கரிய
பிள்ளைப் பெருமா னெனும்மணியே
கரும்பே உன்றன் கனிவாயால்
கந்தா முத்தந் தந்தருளே. 3

அங்கை மழுவோ டனல்மானும்
அணைந்த சிவனா ரிடப்பாக
மங்கை மகிழும் மாமலரே
மகனே என்றன் மாதவமே
செங்கை திகழ்வே லுடனோடிச்
செல்வா வருவாய் சிறப்புடனே
கங்கை சுதனே கனிவாயால்
கந்தா முத்தந் தந்தருளே. 4

விண்ணா டவர்சே னாபதியே
விரிசெங் கதிரே விறல்வேலா
தண்ணா ரமுதே தகைசான்ற
தண்சீ ரலைவாய்ச் சண்முகனே
மண்ணா டவர்க்கோர் மாமருந்தே
மன்னே மணியே மயிலேறும்
கண்ணே உன்றன் கனிவாயால்
கந்தா முத்தந் தந்தருளே. 5

நிதியே குலையா நிலையருளும்
நிமலா என்னுள் நிலவிடுமோர்
மதியே வண்ண மயிலேறி
வாராய் வான மகள்மகிழும்
பதியே என்றன் பாலகனே
பவளச் சிறுதே ருருட்டிவரும்
கதிரே உன்றன் கனிவாயால்
கந்தா முத்தந் தந்தருளே. 6

வினையே மேவி மிகவாடி
விதிர்த்தே மாளா மேனிலையில்
எனையே வைத்த என்னுயிரே
எழிலோ வியமே இசைவடிவே
அனையே எனவே அழைத்தென்றன்
அகமே குளிர ஆடிவரும்

கனியே கந்தங் கமழ்வாயால்
கந்தா முத்தந் தந்தருளே. 7

சிந்தா குலங்கள் சிந்திடப்பூஞ்
சிரிப்பா லென்னைச் சிறப்பித்தாய்
மந்தா கினியும் மகிழ்வுறவே
மணிவாய் ஆறில் மலர்முத்தம்
தந்தா யன்றோ சண்முகனே
தாயென் உள்ளத் தாபமறக்
கந்தா கனிவாய்த் தேனொழுகும்
கண்ணே முத்தந் தந்தருளே. 8

உடலே எனதாய் உழன்றிடுமென்
உள்ளத் திருளை ஒழித்தென்னுள்
நடமே செய்யும் நல்லொளியே
ஞானப் பொருளே நற்றவரின்
இடரே தொலைக்கும் இன்னருளே
இறைவன் நுதற்கண் எழுஞானக்
கடலே உன்றன் கனிவாயால்
கந்தா முத்தந் தந்தருளே. 9

கந்தா கடம்பா கருத்தொளிரும்
கண்ணே மணியே கதிர்வேலா
செந்தா மரையாள் திருமருகா
திருச்சீ ரலைவாய் திகழ்ஞான
நந்தா விளக்கே நான்மூன்று
நளினக் கரங்கள் கொடுதழுவி
இந்தா எனவே என்குகனே
எனக்கோர் முத்தந் தந்தருளே. 10

## பூச்சூட்டல்

### (பெரியாழ்வார் திருமொழி — 'ஆனிரைமேய்க்க')

ராகம்: அடாணா

விண்மணியே நித்திலமே வெற்றிவடி வேலவனே
தண்மதியே என்றனுளத் தாபமற வந்தவனே
பண்மொழியே பேசிவரும் பாவலனே என்றனுயிர்க்
கண்மணியே குழல்முடித்தே கடம்பமலர் சூட்டவாராய். 1



நீலமயில் தேரமர்ந்தே நெடுந்தூரம் சென்றுவிட்டாய்
பாலனுனைத் தேடியுள்ளம் பதைத்துமிகச் சோர்ந்துநின்றேன்
கோலமுடன் திலகம்வைத்தே கொஞ்சுமணி இடையிற்கட்டி
பாலகனுன் குழல்முடித்தே பன்னீர்ப்பூச் சூட்டவாராய். 2

இமயமலை வந்தவளும் எடுத்தணைக்கும் தேன்மலரே
குமரசிவச் செங்கனியே கோமகனே ஓடிவாராய்
அமரருனைப் போற்றிசெய ஆடிவரும் பேரொளியே
சமரபுரிச் சண்முகனே சண்பகப்பூச் சூட்டவாராய். 3

கண்ணுதலான் கண்டுவக்கும் கண்மணியே கனிரசமே
தண்ணருளே வானவர்கோன் சிறைதவிர்த்த சண்முகனே
பண்ணிசையே பார்வதியாள் பரிந்தழைக்கும் பாலகனே
விண்ணமுதே குழல்முடித்தே வெட்சிமலர் சூட்டவாராய். 4

சேவலனே திருமடந்தை சீர்மருகா மயிற்பரியிற்
பூவலனே புரிசுடரே புண்ணியனே புலவர்புகழ்
பாவலனே பாவைவள்ளி பணிந்துமகிழ் நாயகனே
காவலனே குழல்முடித்தே காந்தள்மலர் சூட்டவாராய். 5

என்னவனே எழிற்குமரா ஏற்றமிகு கரிமுகற்குப்
பின்னவனே பிறைமுடியோன் திருச்செவியில் மறைமுடிவைச்
சொன்னவனே சோதிமணிச் சுந்தரனே சுடர்வடிவேல்
மன்னவனே குழல்முடித்தே மல்லிகைப்பூச் சூட்டவாராய். 6

ரத்தினமே அன்பர்குல ரட்சகனே நன்மணியே
முத்தமிழே மோனவொளி முத்திரையே மும்மலந்தீர்
வித்தகனே வெற்றிவடி வேலவனே வேதாந்த
குத்திரமில் கோமளமே குராமலர்நீ சூட்டவாராய். 7

அருமணியே கறைமிடற்றன் கந்தாவென் றழைக்கமயில்
வருமணியே அன்பர்மன வாட்டமற ஞானசுகந்
தருமணியே தன்மயனே தஞ்சமென்றோர் மருளகற்றும்
குருமணியே குழல்முடித்தே கொன்றைமலர் சூட்டவாராய். 8

மருண்டலையும் மனதையுன்பால் வயக்குவித்த மாமணியே
உருண்டலையும் பவப்புணரி ஒழித்தெனையாட்
கொண்டவனே
திரண்டலையும் மணியுதிர்க்கும் திருச்செந்தில் தேனமுதே
சுருண்டலையும் குழல்முடித்தே தும்பைமலர் சூட்டவாராய். 9

மருமலரே மாதவமே வானவர்சே னாபதியே
அருமறையே ஆறுபடை வீடமரும் அயிலரசே
திருவருளே எனதுவினை சிந்துவித்த தேசிகனே
பெருநிதியே குழல்முடித்தே பிச்சிமலர் சூட்டவாராய். 10

**திருச்செந்தில் சந்நிதிமுறை முற்றிற்று**



உ

# காவடிச் சிந்து

## அண்ணாமலை ரெட்டியார்

### 1. விநாயகர் துதி

திருவுற் றிலகுகங்க வரையிற் புகழ்மிகுந்து
திகழத் தினம்உறைந்த வாசனை—மிகு
மகிமைச் சுகிர்ததொண்டர் நேசனை—பல
தீய பாதக காரர்ஆகிய சூரர் யாவரும்மாள வேசெய்து
சிகரக் கிரிபிளந்த வேலனை—உமை
தகரக் குழல்கொள்வஞ்சி பாலனை 1

மருவுற் றிணர்விரிந்து மதுபக் குலம்முழங்க
மதுமொய்த் திழிகடம்ப ஆரனை—விக
சிதசித் ரசிகிஉந்து வீரனை—எழில்
மாக நாககு மாரி ஆகிய மாதி னோடுகி ராத நாயகி
மருவப் புளகரும்பு தோளனை—எனை
அருமைப் பணிகொளும்த யாளனை 2

தெரிதற் கரியமந்திர மதனைத் தனது தந்தை
செவியிற் புகமொழிந்த வாயனை—இள
ரவியிற் கதிர்சிறந்த காயனை—அகல்
தேவ நாடுகெ டாதுநீடிய சேனை காவல னாக வேவரு
திறலுற் றசிவகந்த நாதனை—விரி
மறையத் தொளிர்கின்ற பாதனை 3

மருளற் றிடநினைந்து மனதிற் களிசிறந்து
மதுரக் கனிவுவந்து கூடவே—பல
விதமுற் றிலகுசிந்து பாடவே—அலை
வாரி நீரினை வாரி மேல்வரு மாரி நேர்தரு மாமதாசல
வதனப் பரன்இரண்டு தாளையே—நமக்கு
உதவப் பணிவம்இந்த வேளையே. 4

### 2. முருகன் துதி

சீர்வளர்ப சுந்தோகை மயிலான்—வள்ளி
செவ்விதழ்அல் லாதினிய தெள்ளமுதம் அயிலான்
போர்வளர்த டங்கையுறு மயிலான்—விமல
பொன்னடியை இன்னல்அற உன்னுதல்செய் வாமே. 1

குஞ்சரவ ணங்காவல் வீடா—தபடி
கொஞ்சிமரு வும்சரச ரஞ்சிதவி சேடா

பைஞ்சரவ ணங்காவல் வீடா—வளரும்
பாலன்என மாலையொடு காலைநினை வாமே. 2

வல்லவுணர் வழியாதும் விட்டு—வெருள
வன்சமர்செய் கந்தனிடம் வழியடிமைப் பட்டு
நல்லவுணர் வழியாது மட்டு—மிஞ்சும்
ஞானபர மானந்த மோனம் அடை வாமே. 3

ஒருதந்த மாதங்க முகத்தான்—மகிழ
உத்தமக னிட்டன்என உற்றிடும் மகத்தான்
வருதந்த மாதங்க முகத்தான்—எவரும்
வாழ்த்துகுக நாயகனை ஏத்துதல்செய் வாமே. 4

## 3. முருகன் துதி

மரகத விகசித ஒளிதவழ் இருசிறை
மருவிய மயில்மிசை அனுதினம் உறைதரு வாசன்
பவ நாசன் 1
குரகத சுகமணி வளிரதம் நடவிய
குவலய சரதரன் எனும்மத னனும்மகிழ் கோலன்
பரை பாலன் 2
பரிபுர அணிகல கலஎன ஒலிபுரி
பரிதிஉ தயமதில் அவிழ்மரை மலர்நிகர் பாதன்
குக நாதன் 3
திரிபுர மவைஒரு நொடிதனில் எரிகொடு
சிதைவுற நகைபுரி சிவன்மன மகிழ்உப தேசன்
முரு கேசன் 4
பதுமநி தியினொடு பணிலநி தியும்எழில
பரவிய சுரபியும் உறுசுர புரன்மகள் பாகன்
கன யோகன் 5
சததள நளினத விசுமிசை வதிஒரு
சதுமுக விதிசிறை யதிலுற நிறுவுவி சாகன்
தட வாகன் 6
குரைதிரை வரைநிரை புரைதர உலவிய
குரவையின் நடுவுற நிருதரை முடுகிய கோபன்
கமழ் நீபன் 7
பரைசிவை பகவதி உதவிய சரவண
பவன்அறு முககுகன் மிசைமது ரிதகவி பாடும்
சகம் நாடும் 8

## 4. முருகன் துதி

பவணக் கிரியதனுள் தானே
மன்னு வானே—பல
பாழி லேஅலை யாமல் இன்புற



நாளு மேஅருள் மேவு கண்கொடு பாராய்
இன்னல் தீராய் 1
அவுணப் பகையைமுடித் தோனே
புண்ய வானே—கதி
யாரு மேதரு,’வாரும் இங்கிலை
ஆத லால்அருள் வாய் இனம்புரி யாதே
பண்ணும் தூதே 2
விரகப் பெருவிதனத் தாலே
மண்ணின் மேலே—மனம்
வீணி லேஉழ லாது கந்தவி
சாக னேபுரி, நீயும் வஞ்சம்என் மீதே
எண்ணி டாதே 3
நரகச் சமன்வரும்அப் போதே
பின்நில் லாதே—பல
நாளு மேமற வாது நின்சிறு
பாத மாகிய சீத பங்கயம் நானே
உன்னி னேனே 4
நிமலப் பெருமிதச்செவ் வேளே
கன்னல் வேளே—தொடு
நீடு பாணம தால்ம ருண்டிடை
வாடு மாதரி டங்கெடாவகை நீயே
பண்ணு வாயே 5
குமரிக் காகப்பரல் கானே
நண்ணி னானே—இதழ்
கோதி லாதத போப லம்பெறு
நீதர் பால்அக லாது றைந்தருள் கோவே
என்னுள் வாவே 6
திடமற் றவனினுடைச் சேயே
அன்னை நீயே—திவ்ய
சேவை யேசெயும் ஞான பண்டிதர்
நாவி னூடினி தாவி ளைந்திடு தேனே
பொன்அன் னானே 7
கடல்சுற் றியஉலகப் பாலே
மின்னல் போலே—வரு
காய மாகிய தீய வன்பிணி
மேவி யேதவி யாமல் அன்பொடு காவே
என்ஐ யாவே 8

## 5. முருகன் துதி

செந்தில் மாநகர்வாழ்
கந்த நாதன்இரு

செய்ய பாத கஞ்சமே—நமக்கு
உய்ய மேவு தஞ்சமே—இன்று
செப்பு வது கொஞ்சமே—கேட்கத்
தீய பாதகவி
ரோத மாயம்விட்டுத்
திரும்பு வாயே நெஞ்சமே. 1

பந்த பாசம்இதை
எந்த வேளையிலும்
பார்க்கும் போது தொல்லையே—அல்லால்
ஆர்க்கும் ஆவ தில்லையே—ஒரு
பார மேரு வில்லையே—கையில்
பற்றும் நாதன்மாது
பெற்ற நீதன்மீது
பனுவல் சூடு வல்லையே. 2

மங்கை மார்கள்இரு
கொங்கை துங்கமத
வார ணங்கொள் கும்பமே—முகம்
பூர்ண சந்திர விம்பமே—பட
மாசு ணம்நி தம்பமே—துடை
மார வேள்அரசு
மண்ட பத்தருகில்
வைத்த ரெண்டு கம்பமே. 3

செங்கை சூரியோத
யம்கு லாவமலர்
சீத பத்ம தளமே—வாயில்
ஓது சொற்கள் குளமே—இதழ்
திவ்ய பொற்ப வளமே—என்று
சிந்தித் தால்குமரன்
கந்தப் பாதமலர்
சேர்வ தெவ்வா றுளமே. 4

வன்னி மானவிழி
மின்ன வேகடையில்
வக்ர தந்த சங்கமே—கொண்ட
உக்ர துங்க சிங்கமே—என்ன
மறலி தூதர் பொங்கமே—உற்று
வந்த வேளைநெஞ்சே
கந்த வேளைநினை
மருவு றாது பங்கமே. 5

சென்னி மாநகர்அண்
ணாம லைக்கவிஞன்



தேசம் எங்கும் இசையே—பெறப்
பேசு சந்த மிசையே—சற்றும்
தீர்ந்தி டாத நசையே—வைத்துச்
சேவ லாளிபதம்
ஆவ லோடுபணி
தினமும் நூறு விசையே. 6

## 6. கழுகுமலை நகர் வளம்

தெள்ளுதமி ழுக்குதவு சீலன்—துதி
செப்பும்அண்ணா மலைக்கனு கூலன்—வளர்
செழிய புகழ்விளைத்த
கழுகு மலைவளத்தைத் தேனே
சொல்லு வேனே. 1

வெள்ளிமலை ஒத்தபல மேடை—முடி
மீதினிலே கட்டுகொடி யாடை—அந்த
வெய்யவன்ந டத்திவரும்
துய்யஇர தப்பரியும் விலகும்
படி இலகும். 2

வீதிதொறும் ஆதிமறை வேதம்—சிவ
வேதியர்கள் ஓதுசாம கீதம்—அதை
மின்னுமலர்க் காவதனில்
துன்னுமடப் பூவையுடன் விள்ளும்
கிள்ளைப் புள்ளும். 3

சீதளமு கிற்குவமை கூறும்—நிறச்
சிந்துரங்கள் சிந்துமதத் தாறும்—உயிர்ச்
சித்திரம்நி கர்த்தமின்னார்
குத்துமுலைக் குங்குமச்செஞ் சேறும்
காதம் நாறும். 4

நித்தநித்த மும்கணவ ரோடும்—காம
நேசத்தால்பி ணங்கிமனம் வாடும்—கரு
நீலவிழி யார்வெறுத்த
கோலமணி மாலைரத்னம் நெருங்கும்
எந்த மருங்கும். 5

கத்துகடல் ஒத்தகடை வீதி—முன்பு
கட்டுதர ளப்பந்தலின் சோதி—எங்கும்
காட்டுவதால் ஈரிரண்டு
கோட்டுமத யானையிற்பல் களிறும்
நிறம் வெளிறும். 6

முத்தமிழ்சேர் வித்வசனக் கூட்டம்—கலை
முற்றிலும்உ ணர்ந்திடும்கொண் டாட்டம்—நெஞ்சில்

முன்னுகின்ற போதுதோறும்
தென்மலையில் மேவுகுறு முனிக்கும்
அச்சம் செனிக்கும். 7

எத்திசையும் போற்றமரர் ஊரும்—அதில்
இந்திரன் கொலுவிருக்கும் சீரும்—மெச்சும்
இந்தநக ரந்தனைஅ
டைந்தவர்க் கதுவும்வெறுத் திருக்கும்
அரு வருக்கும் 8

துள்ளியெழும் வெள்ளியலை அடங்கும்—படி
சுற்றிலும் வளைந்தஅகழ்க் கிடங்கும்—பல
சொன்னமலை போல்மதிலும்
மின்னுவதி னாலேபுகழ் தோன்றும்
லோகம் மூன்றும். 9

கள்ளவிழ் கடப்பமலர் வாகன்—குறக்
கன்னியை அணைக்கும்அதி மோகன்—வளர்
கழுகு மலைநகரின்
வளம்முழுமையும் நாவில்அடங் காதே
மட மாதே. 10

## 7. கோவில் வளம்

சென்னி குளநகர் வாசன்—தமிழ்
தேறும்அண் ணாமலைத் தாசன்—செப்பும்
செகம்மெச்சிய மதுரக்கவி
யதனைப்புய வரையிற்புனை தீரன்
அயில் வீரன் 1

வன்ன மயில்முரு கேசன்—குற
வள்ளி பதம்பணி நேசன்—உறை
வரமேதரு கழுகாசல
பதிகோயிலின் வளம்நான்மற வாதே
சொல்வென் மாதே. 2

கோபுரத் துத்தங்கத் தூவி—தேவர்
கோபுரத் துக்கப்பால் மேவி—கண்கள்
கூசப்பிர காசத்தொளி
மாசற்றுவி சாலத்தொடு குலவும்
புவி பலவும் 3

நூபுரத் துத்தொனி வெடிக்கும்—பத
நுண்ணிடை மாதர்கள் நடிக்கும்—அங்கே
நுழைவார்இடு முழவோசைகள்
திசைமாசுணம் இடியோஎன நோக்கும்
படி தாக்கும் 4



சந்நிதி யில்துஜஸ் தம்பம்—விண்ணில்
தாவி வருகின்ற கும்பம்—எனும்
சலராசியை வடிவார்பல
கொடிசூடிய முடிமீதிலே தாங்கும்
உயர்ந் தோங்கும் 5

உன்னத மாகிய இஞ்சி—பொன்னாட்
டும்பர் நகருக்கு மிஞ்சி—மிக
உயர்வானது பெறலால்அதில்
அதிசீதள புயல்சாலவும் உறங்கும்
மின்னிக் கறங்கும் 6

அருண கிரிநாவில் பழக்கம்—தரும்
அந்தத் திருப்புகழ் முழக்கம்—பல
அடியார்கணம் மொழிபோதினில்
அமராவதி இமையோர்செவி அடைக்கும்
அண்டம் உடைக்கும் 7

கருணை முருகனைப் போற்றி—தங்கக்
காவடி தோளின்மேல் ஏற்றி—கொழுங்
கனல்ஏறிய மெழுகாய்வரு
பவரேவரும் இகமேகதி காண்பார்
இன்பம் பூண்பார் 8

## 8. கழுகுமலை வளம்

பொன்னுலவு சென்னிகுள நன்னகர்அண் ணாமலைதன்
புந்தியில் மகிழ்ந்துநித்தம் நின்றவன்—முந்தி
வெந்திறல் அரக்கர்களை வென்றவன்—மயில்
போல ஏனலின் மீது லாவுகி ராத மாதுமுன் ஏகி யேஅடி
பூவையே உனதுதஞ்சம் என்றவன்—ஈயும்
மாவையே இனிதுமென்று தின்றவன். 1

மின்னுலவு சொன்னமுடி சென்னிஅணி விண்ணவர்தே
வேந்திரனும் சித்தர்களும் துன்னியே—கதி
வேண்டியே அகத்தில்அன்பு மன்னியே—பணி
வேல வன்கிரு பாகரன்குகன் மேவி டும்கழு காச லந்தனில்
விஞ்சிய வளங்களையான் உன்னியே—சொல்ல
ரஞ்சிதமாய்க் கேளடிவிற் பன்னியே. 2

மூசுவண்டு வாசமுண்டு காவில்மொண்டு தேனைஉண்டு
மோகன முகாரிராகம் பாடுமே—மைய
லாகவே பெடையுடனே கூடுமே—அகல
மோது வாரிதி நீரை வாரிவிண் மீது லாவிய சீதளாகர
முகில்பெருஞ் சிகரம்முற்றும் மூடுமே—கண்டு
மயிலினம் சிறகைவிரித் தாடுமே. 3

தேசுகொண்ட பாரதந்த வீரதும்பி ராசிஅண்டர்
தேவதாரு வைக்கரத்தில் பிடிக்குமே—சுற்றும்
மேவிய கிளையைவளைத் தொடிக்குமே—ஒளிர்
சேய சந்திர னோடு ரசுப லாம ரங்களி லேநெ ருங்கிய
தீங்கனி மதுரசத்தை வடிக்குமே—மந்தி
பாங்கில்நின் றதனைஅள்ளிக் குடிக்குமே. 4
அந்தரம் உருவிவளர்ந் திந்தரன் உலகுகடந்(து)
அப்புறம்போய் நின்றசையும் சந்தனம்—மரம்
தப்பிதமில் லாதுகையால் வந்தனம்—எங்கள்
ஆறுமாமுக நாதனுக்கிடு மாறுபோலவி சால முற்றகொம்(பு)
அத்தனையும் நின்றுதலை சாய்க்குமே—அண்ட
பித்திகை தனிலும்சென்று தேய்க்குமே 5
கந்தரந் தொறும்கிடந்து கந்தரம் பயந்தொதுங்கக்
கர்ச்சனை புரியும்திறற் சிங்கமே—நெஞ்சில்
அச்சமுறும் விண்ணுறைமா தங்கமே—தடங்
காவி லேசில தாவி லேவளர் மாஇ றால்நடு வேகி ராதர்கள்
கார்முகம்ஏ வுங்கணைகள் ஏறுமே—அதில்
வார்மதுவால் வாரிஉவர் மாறுமே. 6
காலவடி வேலைநெடிய வாள்கொடிய நாகம் உமிழ்
காரிபிணை வாரிகணை பானலே—அன்ன
கூர்நயன வேடமின்னார் ஏனலே—காக்குங்
காலை மேலெறி மோது வார்கவ ணோடு மாமணி தேசு வீசவே
கதிரவன் தனதுமுகம் சுழிக்குமே—அவன்
குதிரையும்கண் ணைச்சுருக்கி விழிக்குமே. 7
ஓலமலி கோலநீல வேலைசூழும் ஞாலமீதில்
உத்தமர்இன் பத்துடனே வானமே—செல்ல
வைத்தபல சித்திரசோ பானமே—என
ஓங்கு கோங்ககில் நாங்கி லாங்கலி பாங்கு நீங்கரு வேங்கை பூங்கழை
ஒன்றொடொன்று வம்புகொண்டு நீளுமே—கோள்கள்
சென்றுசென்று நின்றுநின்று மீளுமே. 8

## 9. வாவி வளம்

புள்ளிக் கலாபமயிற் பாகன்—சக்தி
புதல்வ னானகன யோகன்—மலை
போலத் தான்திரண்ட
கோலப் பன்னிரண்டு வாகன்
நல்வி வேகன் 1
வள்ளிக் கிசைந்தமுரு கேசன்—அண்ணா
மலைக்கவி ராசன்மகிழ் நேசன்—என்றும்
வாழும் கழுகுமலை
வாவி வளம்சொல்லுவேன் மாதே
கேள்இப் போதே 2



வெள்ளை நாரைகொத்தும் வேளை—தப்பி
மேற்கொண் டெழுந்துசின வாளை—கதி
மீறிப் பாயும்தொறும்
கீறிச் சாயும்தென்னம் பாளை
யுடன் தாழை 3
தெள்ளும் பிள்ளையன்னப் பேடும்—இளஞ்
சேவ லானதுவும் ஊடும்—பின்பு
தேம லர்த்தவிசில்
காம முற்றுவந்து கூடும்
உற வாடும் 4
மின்னிக் குலவிமதி மானும்—வரி
வெள்ளைப் பணிலராசி தானும்—மட
மின்னின் விழிகளென
மன்னும் அரியகெண்டை மீனும்
முத்தம் ஈனும் 5
வன்னத் தாமரையைக் கண்டு—வாயில்
மதுர ராகம்பாடிக் கொண்டு—மதி
மயங்கிப் பேட்டினுடன்
முயங்கி யேகிடக்கும் வண்டு
கள்ளை உண்டு 6
அந்த ரத்துமின்போற் கூடி—கொங்கை
யாலே நீந்திவிளை யாடி—செல்லும்
அந்த லார்நடக்கும்
நன்ன டைக்குருகி அன்னம்
செல்லும் பின்னம் 7
மந்த மேதிஉள்ள எட்டும்—சினை
வரிவ ரால்எழுந்து முட்டும்—போது
மடிசு ரந்துகன்று
தனைநி னைந்துகண்ட மட்டும்
பாலைக் கொட்டும் 8

## 10. துதி

கன்னல் சூழ்பழ னம்புடை சூழ்கமு
காச லந்தனில் வாழ்பிர தாபனே—கன
வாசம் எங்கும் கமழ்கின்ற நீபனே—வளர்
காத லோடிரு போதி லும்பல
போதி னால்பணி வார்ம னத்துறை
காரி ருட்குவை நீக்கிய தீபனே—அதி
சூர பத்மனைத் தாக்கிய கோபனே. 1
சென்னி மாநகர் வாழும்அண் ணாமலை
செப்பு செந்தமி ழுக்கதி நேசனே—சிவ

சுப்ர மண்யன்எ னும்பிர காசனே—கொடுஞ்
சிந்தை நைந்துபு லம்பி நின்திரு
மந்தி ரந்தனில் வந்த டைந்துனைச்
சேவிக் கும்குணம் என்றனக் காகுமோ—மிகு
பாவிக் கும்துயர் எப்படிப் போகுமோ. 2

வந்த வர்க்குப் பழம்புளிங் காடியே
தந்தி டச்சகி யார்தமைத் தேடியே—பிர
பந்தம் எத்தனை எத்தனை கோடியே—குலை
வாழை யின்பழ மோக னிந்திடும்
மாழை யின்கனி யோஎ னும்படி
மதுரி தம்பெற வேநிதம் பாடியே—பரி
செதுவும் இங்குப்பெ றாதுளம் வாடியே. 3

வெந்த ரைக்குள் வெடிப்பிடைப் பாலையே
சிந்து பித்தரைப் போல்வெறு வேலையே—செய்யும்
வீணன் நான்விளங் கும்தண்டைக் காலையே—எந்த
வேளை யும்துதி கூற வும்துயர்
நீளும் வெம்பவம் மாற வும்பரி
வில்வ வேணிசேர் தற்பர வாலையே—தரும்
செல்வ மேஎனும் கற்பகச் சோலையே. 4

## 11. தலைவன் வருத்தம் சாற்றல்

வன்னத் தினைமாவைத் தெள்ளியே—உண்ணும்
வாழ்க்கைக் குறக்குல வள்ளியே—உயிர்
வாங்கப் பிறந்திட்ட கள்ளியே—இரு
வடமேருவை நிகராகிய
புயமீதணி பலமாமணி
மாலை பளீரெனத் துள்ளியே—விழ
வான்மதி வீசும்தீ அள்ளியே. 1

கன்னத் தினிற்குயில் சத்தமே—கேட்கக்
கன்றுது பார்என்றன் சித்தமே—மயக்
கம்செய்யு தேகாமப் பித்தமே—உடல்
கனல்ஏறிய மெழுகாகிய
தினியாகிலும் அடிபாதகி
கட்டி அணைத்தொரு முத்தமே—தந்தால்
கைதொழு வேன்உன்னை நித்தமே. 2

வாடி யிருப்பது வஞ்சமோ—பொல்லா
வன்கருங் கல்லோஉன் நெஞ்சமோ—கொண்ட
மையற் பயித்தியம் கொஞ்சமோ—சிலை
மதன்ஆகம முதுகாவியம்
அதிலேமொழி சுகலீலையின்



மார்க்கம் உனக்கென்ன நஞ்சமோ—ஒரு
வார்த்தை உரைக்கவும் பஞ்சமோ. 3

தேடக் கிடையாத சொன்னமே—உயிர்ச்
சித்திர மேமட வன்னமே—அரோ
சிக்குது பால்தயிர் அன்னமே—பொரு
சிலைவேள்கணை கொலைவேல்என
விரிமார்பினில் நடுவேதொளை
செய்வது கண்டிலை இன்னமே—என்ன
செய்தேனோ நான்பழி முன்னமே. 4

## 12. தலைவி ஊடல்

ஆறு முகவடி வேலவ னேகலி
யாணமும் செய்யவில்லை—சற்றும்
அச்சம்இல் லாமலே கைச்சர சத்துக்கு
அழைக்கிறாய் என்னதொல்லை
மீறிய காமம்இல் லாதபெண் ணோடே
விளம்பாதே வீண்பேச்சு—சும்மா
வெள்ளைத் தனமாகத் துள்ளுகி றாய்நெஞ்சில்
வெட்கம்எங் கேபோச்சு. 1

மேட்டிமை என்னிடம் காட்டுகி றாய்இனி
வேறிலை யோஜோலி—இதை
வீட்டில்உள் ளார்கொஞ்சம் கேட்டுவிட் டால்அது
மெத்தமெத் தக்கேலி
தாட்டிகம் சேர்கழு காசல மாநகர்
தங்கும் முருகோனே—இந்திர
ஜாலத்தி னால்என்னைக் காலைப் பிடித்தாலும்
சம்மதி யேன்நானே. 2

ஆத்திரக் காரர்க்குப் புத்திகொஞ் சம்என்பர்
ஆரும் பழமொழியே—நீயும்
அப்படி என்னைப் பலாத்காரம் செய்திடில்
ஆச்சுது பெண்பழியே
சர்க்கரைக் கட்டிபோல் வள்ளிதெய் வானையாம்
தையல் உனக்கிலையோ—இரு
தையல ரைச்சேரும் மையல் உனக்கென்ன
தானும் ஒருநிலையோ. 3

அம்புவி யில்சிறு பெண்களின் மேல்உனக்கு
ஆசைஏன் காணுதையா—நீர்
ஆக்கப் பொறுத்தாலும் ஆறப் பொறாதவர்
ஆகவே தோணுதையா

நம்பும்அண் ணாமலை தாசன் பணியும்
நளின மலர்ப்பாதா—கொஞ்ச
நாளைக்கு மேல்ஒரு வேளைக்கு லீலை
நடத்தினால் ஆகாதா. 4

## 13. தலைவனைக் கலந்த தலைவி பாங்கிக்குக் கூறுதல்

செந்தில் மாநக ரந்தனில் மேவிய
தேசிக னாம்முரு கேசன்—மயில்
வாசியில் ஏறும்உல் லாசன்—சிறு
திங்க ளும்பண சங்க மாசுண
மும்து லங்கிய கங்கை யாறொடு
செஞ்ச டாடவி மீதணி வார்செவி
சேரமுன் ஓதுப தேசன்—அடி
யார்தமை ஆள்விசு வாசன். 1

எந்த நேரமும் வந்தனை செய்தடி
எண்ணும்அண் ணாமலைத் தாசன்—துதி
பண்ணும்மெய்ஞ் ஞானவி லாசன்—என்னோடு
இந்தெ ழுந்துத யங்கு மாலையில்
வந்து வண்டுமு ழங்கு சோலையில்
இன்ப சாகரம் ஆகிய லீலைகள்
அன்புட னேசெய்தான் மானே—அந்தச்
சம்ப்ரமம் என்னசொல் வேனே. 2

மங்கை மார்பல ரும்புடை சூழ்தர
மாமலர் கொய்திடச் சென்றேன்—அங்கோர்
பூமரத் தேதனி நின்றேன்—சந்த்ர
மண்ட லங்களை வென்ற ஆனனம்
ஐந்தொ டொன்றும்மி குந்து வார்மது
வண்ட லோடுக டம்பெனும் ஆரமும்
வாரமும் தோன்றிடச் சேர்ந்தான்—என்றன்
ஏரும் பார்த் தேகளி கூர்ந்தான். 3

பங்க யாசன மேலுறை நான்முகப்
பாதக னும்மலர்க் கைதான்—கொண்டுன்
சோதியை எப்படிச் செய்தான்?—அடி
பஞ்சு ரஞ்சினும் அஞ்சு சீரடி
கொஞ்சு ரஞ்சித வஞ்சி யேபுவி
பட்டு நீநிலை நிற்கஒண் ணாதென்று
பன்மலர் மெத்தைஓன் றிட்டான்—பின்பு
மென்மலர் எந்தன்கை தொட்டான். 4



## 14. தலைவி பாங்கியைத் தூதுவிடுதல்

பூமி மெச்சிடும் அண் ணாம லைக்கொர்துணை ஆனவன்
மயில் வானவன்
ஒரு கானவன்—தினைப்
புனத்தைக் காக்கும்வள்ளி தனத்தைப் பார்க்கமெள்ளப் போனவன். 1

சேம முற்றகமு காச லேசனையே தேடுதே
மனம் வாடுதே
கால்தள் ளாடுதே—இரு
செங்கை தங்கிநின்ற சங்கி னங்கழன் றோடுதே. 2

தென்ற லானபுலி வந்து கோபமொடு சீறுதே
தடு மாறுதே
இதழ் ஊறுதே—மெத்தத்
தீமையாம் இருளில் காம லாகிரியும் மீறுதே. 3

குன்ற மானமுலை ரெண்டும் மார்பில்விம்மிக் கொண்டுதே
தேமல் மண்டுதே
வெப்பம் கண்டுதே—மலர்க்
கொம்பு போலமென்ம ருங்கு லானதுந்து வண்டுதே. 4

உள்ளம் மெல்லமெல்ல லீலை செய்யநினைந் துருகுதே
முத்தம் கருகுதே
கண்ணீர் பெருகுதே—என்றன்
உச்சிக் கேறிக் காமப் பித்தம் கிறுகிறென்று வருகுதே. 5

வள்ளம் மேவும்பசும் பாலும் தேனும்அரு வருக்குதே
கசந் திருக்குதே
துன்பம் பெருக்குதே—வன்ன
வாரும் தாறுமாறாய்க் கீற வேதனமும் பருக்குதே. 6

பார மானகொங்கை ஓரம் வேடன்அம்பு பாயுதே
உடல் தேயுதே
மலர் தீயுதே—கொடும்
பாவி யானமதி ஆவி சோரவந்து காயுதே. 7

மார வேளினாலே கோர மானகாம வாதையே
எனும் தீதையே
தாரகத் தூதையே—சொல்லி
வாட்டம் தீர்குகனைக் கூட்டி வாடிஅடி கோதையே 8

## 15. தலைவியின் நிலைகூறித் தலைவனைப் பாங்கி அழைத்தல்

கண்ணா யிரம்படைத்த விண்ணூ ரிடம்தரித்த
கனவயி ரப்படை யவன்மக ளைப்புணர் கத்தனே—திருக்

கழுகும லைப்பதி அனுதினம் உற்றிடு சுத்தனே
அண்ணா மலைக்கிடர்கள் நண்ணா தொழித்துமிக
அகமகி ழுத்தன தருளைஅ ளித்திடும் ஐயனே—திசை
அரவமும் வெட்குற மயிலைந டத்திய துய்யனே. 1

மின்னோ மலர்க்கமலப் பொன்னோ எனப்புகல
விகசித ரத்தின நகைகள் தரித்தொளிர் மெய்யினாள்—கதிர்
விரவிய சித்திர வளையல்அ டுக்கிய கையினாள்
எந்நே ரமும்மனதில் உன்மீ தில்மையல்கொண்டு
எழுதிய சித்திரம் எனமவு னத்தில் இருக்கிறாள்—வள்ளத்து
இடுகிற புத்தமு தினையும்வெ றுத்தரு வருக்கிறாள். 2

கும்பத் தினைச்சினந்து வம்பைப் பிதிர்த்தெழுந்து
கொடியிடை முற்றிலும் ஒடியவ ளைத்தது கொங்கையே—மணம்
குலவுக டப்பினில் நினைவது வைத்தனள் மங்கையே
செம்பொற் சிலம்புகள்பு லம்பப் பெருந்தெருவில்
திகழ்தரு சிற்றில்களை புரிவதை விட்டவள் தயங்கினாள்—உன்றன்
திருஅழ கைக்கரு விழியுள்இ ருத்திஉள் மயங்கினாள். 3
போரா டுதற்குரிய கூரார் மலர்க்கணைஎய்
புகழ்பெறு சித்தச தனுவத னைப்பொரு புருவத்தாள்—தவம்
புரிபவ ரைத்தன தடியில்வி ழப்புரி பருவத்தாள்
சீரா கமெத்தைதனில் நேரா கவைத்துனது
திருஅத ரக்கனி இதழைஅ ருத்தியே சேர்ஐயா—இந்தத்
தெரிவைஉ ளத்துனை அலதுபி டித்தவர் ஆர்ஐயா. 4

## 16. பாங்கி தலைவியின் அவயவத்து அருமை கூறல்

சந்தவரை வந்தகுக நாதா—பரை
அந்தரிம னோன்மணியாம் மாதா—தந்த
சண்முகச டாட்சரவி நோதா
குழைக் காதா
சூரர் வாதா—வன
சஞ்சரிவெண் குஞ்சரிச மேதா. 1

செந்தமிழ்அண் ணாமலையை ஆளாக்—கொண்ட
கந்தஅர விந்தமலர்த் தாளா—கள்க
சிந்திடுக டம்பணியும் தோளா
நெடு நாளா
மற வாளா(ய்)—உனைத்
தேடோர்குயில் பேடுருவம் கேளாய். 2

சுந்தரம்மி குந்தகுழல் மேகம்—அவள்
சொந்தநுதல், இந்துவில்லூர் பாகம்—திருந்
தும்புருவம், வில்லொடுசி நேகம்



தவ யோகம்
வென்றஅ நேகம்—வஞ்சம்
துஞ்சுவிழி, நஞ்சினிலும் வேகம். 3

சந்தம்மலி கின்றமுகம், இந்து—வள்ளைத்
தண்டுசெவி என்பதுவே தந்து—கன்னம்
சாணை, நுனி நாசிஇன்ப சுந்து
மதுச் சிந்து
தல்பொ ருந்து—சிறு
சண்முகம்துப் பாம்இதழ்சி வந்து. 4

செங்குமுத புட்பமதை ஒத்து—மொழித்
தேன்உலவும் வாய்நகையோ முத்து—கண்டம்,
சீதரனார் ஊதும்வர நத்து
சொல், தித் தித்துப்
பாகைக் கைத்து—விடச்
செய்யும்என உன்னலாம்உ ளத்து. 5

குங்குமவாகு, அங்கசகோ தண்டம்—முன்கைக்
கோ, மகர யாழ்உவமை விண்டம்—கையைக்
கோகனக மோஎனம ருண்டம்,
ஆழி மண்டங்
குலி கண்டம்,—நெருங்
கும்கெளிறு உகிர்கிளியின் துண்டம். 6

கட்டுகதிர்ப் பட்டுமணி வம்பு—கிழி
பட்டுவழி விட்டிடஎ ழும்பு—கின்ற
கட்டழகாம் வட்டமுலை, செம்பு;
யானைக் கொம்பு;
சிவ சம்பு—குடங்
கைக்கும்வளை யாதபொற்சி லம்பு. 7

மட்டவிழ்ப சுந்துளவ மாலே—செங்கண்
வளருகிற தவிசெனும்ஓர் ஆலே—சிறு
வயிறு மயிர் சிற்றெறும்பு போலே
விரை வாலே
வெள்ளம் மேலே—சுற்றி
வந்தசுழி உந்தி, இடை நூலே. 8

தரம்அரவ படம்எனஅல்குல் உண்டு—துடை,
தங்கநிறச் செங்கதலித் தண்டு—முழந்
தாட்குவமை கேட்கில்அவை நண்டு
சினை கொண்டு
வளர் பெண்டு—வரால்,
தக்ககணைக் கால்எனும்இ ரண்டு. 9

பரடுதராசு, உயர்குதிகந் துகமே—அணி
பரவுபுற வடியிணைபுத் தகமே—கடற்
பவளம், மதி தசவிரல்கள் நகமே
அம்போ ருகமே
பத யுகமே—மயில்
பண்ணும்இளஞ் சாயலையா சகமே. 10

மேனகையோடு ஊர்வசிஇந்த் ராணி,—செல்வம்
மிக்கதிரு, முக்யகலை வாணி—இந்த
மின்னரசி தன் உருவம் காணின்,
நெஞ்சு நாணி
மலர்ப் பாணி—தலை
மீதுகுவித் தேதொழுவார் பேணி. 11

சேனையொடு வந்துகருங் காவி—அம்பைச்
செய்யகரும் புச்சிலைவைத் தேவி—சண்டை
செய்யும்ஒரு மன்மதனாம் பாவி
எங்கள் தேவி
உடல் ஆவி—தனைத்
தீர்க்கும்முனம் காத்திடுவாய் மேவி. 12

## 17. தலைவி வருந்தல்

பாளைவாய் கமுகில்வந்து வாளைபாய் வயல்சூழ்செந்தூர்
பாலனம் புரியவந்த புண்ணியா—போகம்
காலையும்செய் கிறாய்முன்பின் எண்ணியா?
வேளையோ விடிந்ததையா நாளைவாரேன் இன்றுகையை
விட்டிடென் றாலும்விடாமல் பிடிக்கிறாய்—பாலை
ஒட்டவே மடியரிந்து குடிக்கிறாய். 1

நித்தமும்அண் ணாமலைசெய் குற்றம்எண்ணா வேலாகண்டோர்
நின்இதழ்ப் பவளங்களில் வெள்ளையே—தெனில்
என்னசொல்வேன் நான்ஒருபெண் பிள்ளையே
மத்தகம் நிகர்தனத்தில் மெத்தநக ரேகைபட்டு
மாலைப்பிறை போல்அனந்தம் தோணுதே—இது
கேலிக்கிட மாகும்என்றுள் நாணுதே. 2

உன்னையும்வி வாகம்இல்லா என்னையுமே அன்னைகண்டால்
ஒன்றும்சொல்லி டாளோஅடா பாவியே—இன்று
தின்றிடுவேன் என்பாள்பச்சை நாவியே
சன்னைசாடை யாகவந்தென் தன்னைஅணை வாய்நீஎன்று
சாற்றிடும்என் உண்மையான சொல்லையே—விட்டுக்
கூற்றுவன்போல் வந்தாய்என்ன தொல்லையே. 3

சாறுசேர் கரும்புருசி யாயிருந்தா லும்வேரோடே
தான்பறித்துத் தின்னுவது ஞாயமோ—முழு
ஆண்பிள்ளைக் கிதுதான்சம்ப்ர தாயமோ



நூறுதரம் மாறிமாறி வேறுவேறு லீலைசெய்தால்
நோகுமோநோ காதோஎனக் குள்ளமே—கொண்டு
போகுமோ கிணற்றுநீரை வெள்ளமே. 4

## 18. தலைமகளிடம் வேறுபாடு கண்டு நற்றாய் வினவுதல்

என்னடி நான்பெற்ற மங்கை
இரு கொங்கை
களில் சங்கை—எண்ண
எத்தனை கோடியோ செங்கை—விர
லிடமேவளர் நகரேகைகள் மிகவேபடு வகைதோகையில்
ஏய்ந்த முருகவேள் கிள்ளி—உனைத்
தோய்ந்ததோ சொல்லடி கள்ளி. 1

அன்ன வயல்செந்தூர் வாசன்
மந்த காசன்
அன்பர் நேசன்—நாளும்
அண்ணா மலைக்கவி ராசன்—பாடும்
அமுதச்சுவை தருமுத்தமிழ் களபத்தோடு கமழ்பொற்புய
அற்புத வேலன்செய் ஜாலம்—தன்னால்
கற்பழிந் தாயோஇக் காலம். 2

சித்தசன் கொக்கோக நூலை
அந்தி மாலை
யொடு காலை—வைத்துச்
சிந்திப்ப தாச்சுதுன் வேலை—சிமிழ்ச்
சின்னத்தன மடவஞ்சியே! உன்னைப்பணி வொடுகெஞ்சியே
சேவற் கொடியோன்பூஞ் சோலை—தனில்
தேடிப் புரிந்தானோ லீலை. 3

மெத்தப் பிரமைகொண் டேங்கி
கொங்கை வீங்கி
நேசப் பாங்கி—மாரை
விட்டுத் தனியாக நீங்கி—வடி
வேலுக்கதி பதிமையலை மேலிட்டல றியதையலே
வெட்கத்தைப் போக்கடித் தாயோ—காம
வேசைத் தனம்படித் தாயோ. 4

இன்னம் விவாகமே இல்லை
கமழ் கொல்லை
வெடி முல்லை—குழல்
எங்கும்சிங் காரித்து வில்லை—சந்தம்
இனிதாகிய களபம்தன கனமேருவில் அணிகின்றனை

இப்படி யும்தலை விதியோ—பெண்ணே
செப்படி யேஇது மதியோ. 5

சன்னத மாய்க்காமப் பேயே
பிடித் தாயே
வேப்பங் காயே—போலச்
சாதம் வெறுத்தாயே நீயே!—பெருஞ்
சண்டாளியே! கண்டோர்திரள்கொண்டேபழி விண்டார்நம
சாதிக்கெல் லாம்ஒரு வடுவே—வரத்
தான்பிறந் தாய்வந்து நடுவே. 6

வண்ணப் பயிரவி தோடி
ராகம் பாடி
உற வாடி—சப்ர
மஞ்சத்தி லேசென்று கூடி—உன்றன்
வன்னப்படி கம்போல்ஒளிர் கன்னத்தினி லும்தேன்இதழ்
வாயிலும் கொஞ்சம்பற் குறியோ—வைத்தான்
வாலை மகனுக்கும் வெறியோ. 7

எண்ணம் குமரவேள் பாலே
சென்ற தாலே
இனி மேலே—வயிறு
எப்படி யாகிலும் சூலே—வரும்
என்றேஎன துளம்அஞ்சுது நன்றேசொலின் என்வஞ்சகம்
இல்லை கிழவன்சொல் வீணைக்—காரர்க்(கு)
கேட்காதென் றாலும்கண் ணாணை. 8

## 19. தலைவி இரங்கல்

நேம மாய்ப்பணிஅண் ணாம லைக்குதவு நீதனை
கழுகுமலை நாதனை—நெஞ்சில்
நினைக்க நினைக்கமீறி எனைக்கொல் லுதேகாம வேதனை
கோம ளக்கடலி லேமி குத்ததிரைக் கூட்டமே
அங்கமிலான்போ ராட்டமே—செய்து
கோர மேவிளைத்தால் தீரு மோஎனக்கு வாட்டமே
வெள்ளித் திரையின்மேலே துள்ளித் திரியும்சுறா மீனமே
இனியும்உண்டோ மானமே—கொங்கை
வீக்கம் கொண்டதனால் ஏற்கு தில்லைஅன்ன பானமே
அள்ளற் கழிக்கரையுள் மெள்ளக் குலவிவரும் ஆமையே
கொடியகாமத் தீமையே—நாளும்
அதிக ரித்திடலால் அவம திக்குதிந்தச் சீமையே. 1

பொங்கும் மதுமலர்கள் எங்கும் பரிமளிக்கும் புன்னையே
பெற்றுவளர்த்த அன்னையே—எந்தப்
போதும் வைதுவைது மோது கிறாள்பாவி என்னையே



தங்கு நித்திலம்புரி இங்கி தவலம்புரிச் சங்கமே
தென்றலும்ஒரு சிங்கமே—போலத்
தாக்க வேமயங்கி ஏக்க மாய்மெலிந்தேன் அங்கமே
மங்கை மார்கள்அத ரங்கள் நேர்பவள வல்லியே
பிரியேன்என்று சொல்லியே—போன
வாசக் கடம்பன்வர நேசத் துடன்சொல்லுமோ பல்லியே
அம்க யத்துநிறை பங்க யத்துள்உறை அன்னமே
பிரியம்வைத்து முன்னமே—கட்டி
அணைத்த வேல்முருகன் தனைக்கண் காணேன்ஐயோ இன்னமே. 2

## 20. சுரம்போக்கு-நற்றாய் இரங்கல்

பாதி ராத்திரி வேளை யில்வீட்டுப்
பக்கத் தில் வந்து மேவி—பஞ்ச
பாத கன்ஒரு பாவி—சிறு
பாவை யைமெள்ளக் கூவி—கையைப்
பற்றிக் கூட்டிக்கொண் டேகி னான்பதை
பதைக்கு தேஎன்றன் ஆவி. 1

சோத னைப்பிர கார மாய்எனைத்
தொடர்ந்த தேபெருந் தோஷம்—எவர்
சூதி னால்வந்த மோசம்—இனித்
தொலையு மோபிள்ளைப் பாசம்—இதைச்
சுற்றத் தார்அறிந் தால்எ னக்குமுன்
சொல்வ ரேபரி காசம். 2

தேன்இ லங்கிய காவ னம்திகழ்
சென்னி மாநகர் வாசன்—துதி
செய்அண் ணாமலைத் தாசன்—செப்பும்
செந்த மிழ்க்கருள் நேசன்—நாளும்
சிந்த னைசெயும் தொண்டர் தீவினை
தீர்த்தி டும்முரு கேசன். 3

நானி லம்புகழ் கழுகு மாமலை
நாய கன்பாண்டி நாட்டில்—நெஞ்சில்
நாணம் விட்டுத்தன் பாட்டில்—வெப்பம்
நண்ணி யபாலைக் காட்டில்—மகள்
நடக்க வேண்டிமுன் அடக்க மாய்த்தெய்வம்
லபித்த தோமண்டை ஓட்டில் 4

மையல் கொண்டொரு பையல் பின்செல்ல
வயது மீறின மாதோ—இந்த
மார்க்கம் தோன்றின தேதோ—சென்ம
வாச னைப்பலன் ஈதோ—ஐயோ
மாதம் பத்தும்சு மந்து பெற்றஎன்
வயிறு தான்எரி யாதோ. 5

செய்ய பஞ்சணை யும்பொ றாது
சிவந்து கொப்பளம் ஆகும்—நெரிஞ்
சிப்ப ழும்என்று நோகும்—அவள்
சீற டிரெண்டும் வேகும்—படி
தீயும் கானலில் காயும் வேனிலாம்
தீயில் எப்படிப் போகும். 6
தேடி னும்கிடை யாத தாகிய
திரவி யக்கரு வூலம்—போலே
செனித்த பெண்ணுக்குச் சீலம்—வேறே
திரும்பி னதென்ன காலம்—கொங்கை
திரண்டி டாமுன்னம் மருண்டி டற்கெவன்
செய்தா னோஇந்த்ர ஜாலம். 7
காடு சேர்கையில் கரடி வேங்கைகள்
காட்டு மேஆர வாரம்—அதைக்
காதில் கேட்டுவி சாரம்—வைத்துக்
கலங்கு வாள்அந்த நேரம்—என்றன்
காத லிதன்னை ஆத ரித்துயிர்
காப்ப துவேலன் பாரம். 8

## 21. தலைவி வருந்துதல்

மஞ்சுநிகர் குந்தளமின்னே
சததளங்கள் விகசிதம்செய்
வாரிசாத னத்தில்வாழ்பொன்னே—செய்ய
வன்ன மேஒளிர் சொன்ன மே—நடை
அன்ன மேஇடை பின்ன மே—பெற
வந்ததன பாரவஞ்சியே
அதிவிருப்பத் துடன்உரைக்கும்
வார்த்தையைக்கேள் ஆசைமிஞ்சியே. 1
அஞ்சுவய தான பருவம்
தனில்எனது சிறுமனைமுன்
அங்கசவேள் போலஉருவம்—பெற்றே
அன்று வந்துந யந்து—மாலையில்
நெஞ்ச ழிந்தும யங்க—வேபுணர்
ஆறுமுக வேலவனையே
நினைவுகொண்டே மதிமருண்டே
ஆறுதில்லை என்னவினையே. 2
என்இரண்டு கண்ணும்தேடுதே
கனவிலும் மனதுநினைந்து
ஏக்கமுற்று அலைந்துவாடுதே—முன்னம்
என்றன் ஆகம தொன்ற—வேபுணர்ந்து



அன்று போனகு கன்தன்—ஆவலை
எண்ணிஎண்ணி என்ன பயனே
உருகிநிதம் மறுகிவிழ
இப்படிவி தித்தான்அயனே. 3
சென்னிகுளம் மேவியவாசன்
இனியதுதி அனுதினமும்
செய்திடும்அண் ணாமலைத்தாசன்—பாடும்
சிந்து மீதுமி குந்த—மோகமு
றும்சு சீலகு கன்ச—ரோருக
திவ்வியமு கங்கள்ஆறுமே
கண்களில் கண்டால் பெண்களுக் கெல்லாம்
செவ்விதழும் வாயும்ஊறுமே. 4

## 22. தலைவியின் ஊடல்

செந்தூர் வளர்முருக நாதா—அருணோதயச்
செந்தா மரைநிகரும் பாதா—திகழ
சிந்தையில்அண் ணாமலைசெய் நிந்தையைஎண் ணாதருள்செய்
சித்திர வேற்கரவி நோதா—உனதுவஞ்சச்
செய்கைஇன் னமும்தெரி யாதா. 1
சந்தோஷ மாகவேபோய் வீடு—வீடுகள்தோறும்
சரசம்கொண் டாடுவதே பாடு—வந்துன்
றன்னுடனே சேர்பிரியக் கன்னியர்கள் பேர்வரியச்
சகஸ்திரம் வேணுமேவெள் ளேடு—தனித்தோரிடம்
தங்கியே மேயுமோவெள் ளாடு. 2
வேசையர் வாசலிலே சென்று—தம்பலங்களை
வெட்கமில் லாமல்வாங்கி மென்று—தின்று
மெத்தப்பயித் தியம்கொண்டு சுற்றித்திரிந் தேமருண்டு
வீடுதே டிவந்தாயே இன்று—தொடவே மாட்டேன்
வேணும்என் றாலும்போடு கொன்று. 3
ஆசைகொண்டவருக்கு ரோசம்—கிடையாதென்பார்
அப்படிக் காகிலும்விஸ் வாசம்—வைக்கும்
அந்தவிலைப் பெண்டுகளைச் சொந்தமெனக் கொண்டனையோ
ஆனாலும் உன்னைப்போல மோசம்—போனவர் உண்டோ
ஆரும்செய் வாரேபரி காசம். 4
கந்தாசெய் யாதேபல வந்தம்—புதுமலரைக்
கசக்கி அறிவார்களோ கந்தம்—சற்றும்
காதல்இல்லா மல்சினந்த மாதைவலி யப்பிடித்துக்
கலந்தால் வருமோசுகா னந்தம்—உனக்கெனக்குத்
கனவிலும் இல்லைஇனித் தொந்தம். 5
எந்தப் பிறப்பினுமே வல்லி—உனைஅல்லாமல்
எவளையும் பாரேன்என்று சொல்லி—ஊரில்

எத்தனைப ரத்தையரை நித்தமும்அ ணைத்தனையோ
இப்படிக் காசிகாஞ்சி தில்லி—கன்யாகுமரி
எங்குபார்த் தாலும்இல்லை சல்லி. 6

கங்கு கரைஇல்லையே ஜாடை—சொல்லிவைபவர்
கட்டுகி றாயேஎதற்கு ஆடை—மானம்
காக்கவல்ல வாளன்பாலே சேர்க்கையில்லா தேஅன்பாலே
காத்தாயே வேசைமாதர் மேடை—கைவசமாமோ
கலப்புல்லுத் தின்றாலுமே காடை. 7

குங்குமம் சந்தனம்சவ் வாது—சுககதம்பம்
குமுகுமென் றேபுயத்தின் மீது—வாசம்
கொட்டுதெழில் நெற்றிசந்தப் பொட்டொடுப கட்டுதிந்தக்
கோலம் புதிதாய்வந்த தேது—நடந்ததெல்லாம்
கொஞ்சம்சொல் வாய்பண்ணாதே சூது. 8

## 23. பாலனைப் பழித்தல்

அங்கத் திற்பசப் பாச்சே—அழகு
அவள வும்குடி போச்சே—முந்தி
ஆதிபிர மாவகுத்த சோதனையி னால்உதித்த தய்யோ
இதும் பொய்யோ. 1

தங்கக் கிண்ணங்கள் போலே—முன்னும்
தனங்க ளும்சாய்ந்த தாலே—கந்தன்
தன்னைமரு விச்சுகித்த கன்னியர்க ளுக்குள்மெத்தத் தாழ்ந்தேன்
நொந்து வீழ்ந்தேன். 2

சாமம் நாலினும் பிரியான்—என்னைத்
தனிக்க விட்டெங்கும் திரியான்—கர்ப்பந்
தன்னையறிந் தென்னையும்விட் டன்னியராம் கன்னியரைச் சார்ந்தான்
ஆசை தீர்ந்தான். 3

காமம் மீறுவதென் றழுவான்—பின்னும்
காலி லேவந்து விழுவான்—அவன்
காசுதனில் ஆசைவைக்கும் வேசையர்கள் மீதினிலேகடந்தான்
அங்கே நடந்தான். 4

கோடிச் சேலைக்கோர் வெள்ளை—இளங்
குமரிக் கேஒரு பிள்ளை—என்று
கூறுகின்ற வார்த்தைநெஞ்சில் தேறிஎனக் கானதென்று கொண்டேன்
மனம் விண்டேன். 5

வேடிக் கையெல்லாம் விடுத்தேன்—பஞ்சு
மெத்தை யும்தள்ளிப் படுத்தேன்—கோடி



மின்னலொளி போல்இருந்த என்நிறம்எல் லாம்மெலிந்து வெளுத்தேன்
பிஞ்சில் பழுத்தேன். 6

சென்னி மாநகர் வாசன்—துதி
செய்அண் ணாமலைத் தாசன்—தர்ம
சிந்தையில்இ ருந்துநித்தம் வந்ததுய ரம்தவிர்க்கும்சீலன்
உமை பாலன். 7

கன்னி மாமதில் சூழும்—திருக்
கழுகு மாமலை வாழும்—மயில்
கந்தன்ஒரு மைந்தநீபி றந்தபோது லைந்ததெண்ணிக் கழித்தான்
மெட்டை அழித்தான். 8

அந்த ரப்பிழைப் பாச்சே—நட்
டாத்துக் கோரையாப் போச்சே—இங்கே
ஆறுமுக நாதன்மனை தேடிவரும் வேளைதனி யாச்சே
பெரு மூச்சே. 9

சந்த னம்பன்னீர் வில்லை—பூசச்
சம்ம தம்இப்போ தில்லை—சிவ
சண்முககு மாரவேளுக் கின்னமும்என் மீதில்ஆசை தருமோ
மோகம் வருமோ. 10

அழுதா லும்துயர் போமோ—இந்த
ஆபத் தும்வர லாமோ—தோழன்
ஆறுமுக வன்புரியும் போகமேநி னைந்துருகு தாவி
அடா பாவி. 11

பழுதில் லாதகொக் கோகம்—தனில்
பகரும் காமசை யோகம்—அந்த
பக்ஷமுற்ற வேலவனை இக்ஷணத்தி லேபிரித்தாய் பாலா
எம காலா. 12

## 24. தலைவனிடம் கூறுவது

கந்தம்சேர் தருபொழில் திகழ்கழு
காசல மாநகர் வாழ்முருகா
கஞ்சந்தான் எனஒளிர் விகசித
கரதல மாதவன் மால்மருகா
கருதும்அண் ணாமலை தேசிகனே அருணைஉண் ணாமலை யாள்மகனே
கங்குல்பொருந் தும்குழல்தங் கும்சிறுபெண் ணும்தினமும்
கண்டும யங்கினள் அணைவாயே. 1

தொந்தந்தோம் திங்கண என்றுது
லங்கும்அ ரம்பையர் ஆடிடவே
துன்றும்கார் மழைஎன வீணைகள்
தும்புரு நாரதர் பாடிடவே

சுடர்மர கதம்நிகர் தோகையிலே திடமொடு பவனிநீ போகையிலே
தொங்கல்களும் சங்கினமும் பொன்கலையும் சிந்தினள்உன்
சொந்தம்ள னும்கனி அணைவாயே. 2

அண்டம்பா தலமதி லும்கிடை
யாதச வுந்தர ரூபவதி
அஞ்சம்பால் அனுதினம் அமர்புரி
அங்கச ராசன்அ டைந்தநிதி
அகிலமு மருள்பிர காசமயில் மிகமது ரிதமொழி பேசுகுயில்
அன்றிலும்இந் தும்கடலும் கண்டுமருண் டஞ்சுதல்கொண்
டங்கம்மெ லிந்தனள் அதுபாராய். 3

காவடிச்சிந்து முற்றிற்று



உ

# சஷ்டி காவடிச் சிந்து

## ஏ. எம். நடராச முதலியார்

சென்னை திருவொற்றியூர் திருமூலட்டான
அருட்ஜோதி முருகன் காவடிப் புகழ்

### கணபதி காப்பு

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

### வேண்டுதல்

#### ஆசிரியம்

கந்தமா தனகிரி யெனுமுயர் பஞ்சாக்ஷரக்
காவடியைத் தோளி லேந்தி
கலையோதும் திருநாவில் ஆறுபடை வேல்கொண்டு
கவினிடையி லிரதம் பூட்டி
வந்தடியர் பலர்சூழ வாத்திய மொலித்திட
வளர்சஷ்டி காவ டியுடன்
வரமிகும் ஏகாம்ப ரேசர்சந் நிதிவிட்டு
மகிழ்ஒற்றி யாலயஞ் சேர்ந்(து)
எந்தஉல கும்புகழ திருமூலட் டானத்தில்
இலகு முருகா உனக்கு
இணையிலாக் காவடிச மர்ப்பித்து ஆண்டுதொறும்
இஷ்டமாய்ப் பூசை யாற்றி
சந்ததமும் பத்திசெயும் வேல்சாமி மாணவன்
சாதுசிவ லிங்க வேளின்
தன்மரபெலாம் ஓங்கிப் பொன்பொருள்வை
போகமுடன்
சார்ந்துய்ய அருள்புரி வையே.

## சாமுண்டீஸ்வரி துதி

### ஆசிரியம்

மாயிமஹி ஷாசூர மர்த்தனி மனோன்மணி
மாதங்க கௌரி சூலி
மரகதாங்கி ராஜ ராஜேஸ்வரி விமலி
மணிமகுட லோக ஜனனி
தூய இதயத்தினர் தொழுங்கரக பாலினி
துர்க்கையே தாக்ஷா யணி
துரைமக ளெனுங்குமரி பார்வதி பராசக்தி
துஷ்ட சங்காரி நிமலி
நீயலதிவ் வடிமையைக் காப்பதற் கெவருண்டு
நித்ய கல்யாணி எந்தன்
நினைவிலும் கனவிலும் குடியிருந் தெந்நாளும்
நீங்காத செல்வம் அருள்வாய்
தாயினுந் தயையுடைய சிவகாம சுந்தரி
தர்மசம் வர்த்த னியுனைத்
தாமண்டி தொழுபவர்க் காமென்றும் துணைசெயும்
சாமுண்டி மாகா ளியே.

## வடிவாம்பிகை துதி

### ஆசிரியம்

கணிகொண்ட பஞ்சலட் சணவிதியெலாந் தேர்ந்து
கவிபாடும் வழிய றிகிலாக்
கசடனே யாயினும் ஆசைவெள் ளத்தினால்
கழறும்என் சொன்மாலை யேற்(று)
அணிகொண்ட எண்டிருவின் வாழ்வும் தீர்க்காயுளுடன்
அண்டினோர்க் குதவி வரவும்
அரியபே ரானந்த அடியர்பணி செய்யவும்
ஆசையீ தன்றிப் பொல்லாப்
பிணிகொண்டி டாதபடி வாழவும் நின்பாத
பிரசமலர் ஏத்தித் தொழவும்
பிரியமிதென் விண்ணப்பம் சக்திசிவ சாமுண்டி
பெரியமனம் செய்தடி மைபால்
மணிமந்திர ரூபியே திருவருள்செய் இதுதருணம்
மகிழ்சென்னை யொற்றி நகர்வாழ்



மதனாந்த கர்க்குரிய நிதியாய் அமைந்தொளிரும்
வடிவாம்பிகைத் தெய்வமே.

## ஜோதி வள்ளலார் துதி

(பீம்ப்ளாஸ் - ஆதி)

ஜோதி ராமலிங்கம்
சுயமான ஞானத்தங்கம்-சாது சங்க-

பாதி இரவில் அன்பாய் வடிவாம்பிகை
ஆதரவாய் தரும் அமுதுணும் ஆண்டகை

உலகினில் சமரஸம் உற அவதரித்தார்
ஒருகலை தனையுடல் முழுவதும் தரித்தார்
பலமறைதனை யருட் பாவிலே விரித்தார்
பசித்தவர்க் குதவிடும் படியே எச்சரித்தார்

புலைகொலை யொழித்திடப் புறப்பட்ட வீரர்
புத்தர் அகத்தியர்போல் போதிக்கும் கைக்காரர்
இலகும் ஸ்திரஜீவியாய் இருக்கும் உதாரர்
இன்ப நடராஜனை மறவா கம்பீரர்

## பாம்பன் சுவாமிகள் துதி

குமரகுரு தாசப் பெருமானே-எம்
குறைகளைந்தே ஆசி தருவோனே (கு)

சமரபுரியவன் அந்த விம லர்க் கிறையாங் கந்த
சரவணபவன் சொந்த உருவமெனவே வந்த (கு)

ஆனபிற மதங்கள் அனைத்துமே தாழ
அறுமுகச் சிவன்அன்பில் அனைவரும் ஆழ
மானிலம் யாவுமுன் மலரடி சூழ
மன்னுமஹா தேஜோ மண்டலம் வாழ (கு)

அடியரெம் பூஜையை ஏற்றுக் கொள்வாயே
அருணகிரிப் பெயரால் அழைக்கப் பெற்றோயே
கொடிய வறுமைப்பிணி கூற்றொழிப் பாயே
குணமலையே எமது குலதெய்வம் நீயே. (கு)

சங்கந்தனிலே நாங்கள் சார்ந்திடக் கூட்டு
தவறு செய்தாலும் எமைத்தாங்கிப் பாராட்டு
தங்கமே எமக்குஉத் தமவழி காட்டு
தாசன் நயினாசாமித் தமிழ்ப்பதங் கேட்டு. (கு)

## காவடிப்புகழ்

1. சீராரும் ஞானகுரு நாதா - உனை
சிந்திக்கும் மைந்தற்கிரங்கும் வினோதா

2. தீரா கடம்பணி வதீதா - சர்வ
தேவாதி தேவர்கள் மேவும்பொற் பாதா

3. வீராதி வீரனே அபேதா-இந்த
வேளையில் வந்தென்னை யாளப்போ காதா

4. வாரா திருப்பதும் சூதா - இந்த
வன்புவியில் நான்படட துன்பம் போதாதா

5. ஆறாறு பனிரெண்டு தோளா - மிக்க
அழகான தெய்வானை தழுவு மணவாளா

6. ஓராறு முகனே குணாளா - ஞான
ஓங்காரனே என்சொற் பாங்காகக் கேளாய்

7. காரார் குழல் சத்தி பாலா
கந்தா பயந்தே கலங்குறேன் சீலா

8. தீரா வினைதீர்க்கும் வேலா - மாது
சிங்கார வள்ளிக் கலங்கார லோலா

9. ஆரா ரிருந்தென்ன லாபம் - எந்தன்
ஆசைக் குரித்தான நீ சுப்ரதீபம்

10. நீரார் ஜடேசன் குமாரா - உண்மை
நெறிகண்ட பேருக்கு அருளமுதாரா

11. அரஹரா குமரகுரு தேவா - ஓம்
அருளாளனே வையா புரிமானுபாவா

12. மாலுக் குரித்தான மருகா - திகழ்
வடிவேல னேசேவற் கொடியோனே முருகா

13. பழனியில் வாழ் சுப்ரமண்யா - கோடி
பத்தர் துதிக்கும் ப்ர சித்தலாவண்யா



14. மாசிலாப் புண்யானு கூலா - செல்வம்
மங்கா தொளிர் சிக்கல் சிங்கார வேலா

15. கண்டி நகர் வாழும் விசாகா-நல்ல
கார்த்திகேயா புண்ய மூர்த்திவை போகா.

16. திருப்பரங் குன்றுடையானே - உன்
திருத்தாள் துதிப்பவர் வருத்தந் தீர்ப்போனே—நீ

17. அசுரர் குலத்தை யறுக்க - அன்று
அரனார் நுதற்கண் அனலால் பிறக்க

18. வசுக்களெல் லாமுந் துதிக்க - அக்னி
வாங்கி சரவணைத் தாங்கி விடுக்க

19. கங்கை யணைத்துக் களிக்க - ஆறு
கான்முளை யாகிநீ தேன்வாய் திறக்க

20. அன்போடு உமையாள் எடுக்க - அங்கே
அன்றாறு உருவமும் ஒன்றாய்ச் சிறக்க

21. கந்தா வென்றீசர் அழைக்க - தேவர்
கஷ்டங்கள் தீர்ந்ததென் றிஷ்டம் பலிக்க

22. பின்பு தனப்பால் கொடுக்க - அதில்
பீரிட்ட அமிர்தமும் நீரிற் கலக்க

23. சோர்ந்தமும் மீனும் புசிக்க - முன்போல்
சொந்த வுருவைக்கொண்டு வந்தெதிரில் நிற்க

24. தம்பியர் துணைகொண்டு மிக்க - லீலைத்
தான்செய்தீ ரேஜெக மேங்கித் தவிக்க

25. மலைகளெல் லாமும் பறக்க - அப்போ
வாடிய தேவர்கள் ஓடி யொளிக்க

26. மதியற்ற அயனும் மதிக்கா - தெண்ணி
வருகையில் பிரணவப் பொருள்தனைக் கேட்க

27. விதியோன்அவ் வேளை விழிக்க - உடன்
வீரபாகைக்கொண்டங் கோர் சிறைவைக்க

28. சதிராய்ச் சிவனும் தடுக்க - முக்கண்
சாமிக்கும் சாமியாய்த் தாமாகி நிற்க

29. அரியயன் அமரர் அதிர்ச்சிக்க - பல
அகில உலகும் புகழ்ந்தே இச்சிக்க

30. நாதங்க ளெங்கும் முழக்க - அங்கு
நானாவித வன்ன சேனை நெருக்க

31. கானசங் கீதம் படிக்க - வான
கன்னியர்கள் ஓர் கோடி முன்னே நடிக்க

32. தீபங்க ளெங்கும் ஜொலிக்க - வித்வ
சித்ரகவி ராஜர்கள் சித்தங் களிக்க

33. செங்குந்தர் என்றும் செழிக்க - வெனச்
செப்புமறை விப்பிரர்கள் ஆசீர்வதிக்க

34. மத்தாப்பூ வாணம் விளக்க
மன்னரொடு தேவர்களும் பன்னீர் தெளிக்க

35. எங்கும் திருப்புகழ் படிக்க - தேவ
இந்திரனும் சந்திரனும் வந்தங்கிருக்க

36. கணபதியார் முன்னே நடக்க - எங்கள்
கனவீர பாகெனும் துணைவன் முடுக்க

37. சந்தனம் புனுகு வாசிக்க - கட்டி
சர்க்கரைப் பால்பழம் கற்கண் டிறைக்க

38. இந்தஉல கெல்லாம் பிழைக்க - வரும்
எங்கந்த நாதவென செங்குந்தர் நிற்க

39. கற்பூர தீபங்கொடுக்க - முழுதும்
கணகணவென் றடிபடும் மணிஎச் சரிக்கை

40. நீதருங் காக்ஷியை நினைக்க - என்
நெஞ்சங் கரைந்துடலும் மயிர்க்கூச் செடுக்க

41. வந்திடுங் கந்த கும ரேசா
வள்ளிதெய் வானைக்கு கந்தமுருகேசா

42. எட்டிகுடி கதிர்காம ராயா
எப்பொழுதும் மெய்ப்பொருள் விரிக்கின்ற
தூயா



43. போரூர் திருப்பரங் குன்றோய் - உனைப்
போற்றுவார் தங்கள்வினைக் கூற்றினையே
வென்றோய்

44. கழுகுமலை சிக்க லாரூரா
கற்பகமே அற்புதத் திருப்புழ் சிங்காரா

45. காளத்தி புலிவலம் சிற்றூர்
கற்பூர வாசத் திருத்தணி களத்தூர்

46. வயித்தீஸ்வ ரன்கோயில் வாசா - கலியுக
வரதனே கார்த்திகை விரதர்களின் நேசா

47. குன்றுதோ றாடுமுரு கோனே
கோலமயில் மீதிலமர் வேலவ சீமானே

48. பழமுதிர் சோலைவளர் சாமி - வைணவப்
பாங்கான வேங்கடத் தோங்குமுயர் நேமி

49. கும்பகோணம் குமர கோட்டம்
கோவையொடு தேவையரு ணாசல
கொண்டாட்டம்

50. உள்ளபடி என்முறையைக்கேளாய் - பிறகென்
ஊழ்வினையைப் போக்கியருள் ஏழை பங்காளா

51. பூராய மானப் படிப்பு - நான்
புத்தியாய்க் கற்றென்ன முற்றும் நடிப்பு

52. பெண்மோகத்தில் நானோ கெட்டி - ஞானப்
பிரசங்கம் செய்வதில் துரைசிங்கக் குட்டி

53. என் சொல்லைத் தள்ளி ஆக்ஷேபம் செய்ய
எவர் வரினும் நாய்க்கு மேல் உண்டாகும்
கோபம்

54. என்போல மாதர்கள் மீது - மோகம்
எவர்கொண் டலைந்தார்கள் புவனத்திலோது

55. அன்பென்னும் வார்த்தையோ தூரம் - மற்ற
அக்கிரம மென்றா லெனக்குள்சுவிகாரம்

56. இல்லையடைந்து மேபிக்ஷை - கேட்டு
இடம்விட்டுப் பெயரு முன் அடைவாரே சிக்ஷை

57. ஆலய மென்றாலோ நஞ்சு - இதர
அநியாய மென்னிலோ துணியுமென் னெஞ்சு

58. மதுபான வகையே தான் சொர்க்கம் - அதை
மறுப்போ ரிடத்தே தொடுப்பேனே தர்க்கம்

59. கலகத்தில் நான்முதற் பாதம் - எல்லாம்
கற்றவன்போல நடிப்பேன் எப்போதும்

60. பொய்யூரே என்குடி யிருப்பு - அந்தோ
புகலுமெய் யென்றாலே மிகவும் வெறுப்பு

61. சொல்லலங் காரங்கள் ஜாஸ்தி - கெட்ட
துற்குணத்தோடு குதர்க்கந்தான் ஆஸ்தி

62. ஆகாயக் கோட்டை யென்போலே - பேசி
யார்கட்டுவார்கள் தன் வாய்விட்டு மேலே

63. பொருளில்லை யென்கின்ற ஏக்கம் - எனக்கு
புதிதல்ல ஏராளப் பேராசை வீக்கம்

64. நல்லமதி யென்பதுவே நீக்கம் - இந்த
நாடோடி ஈடேற நீ செய்வாய் மார்க்கம்

65. பொன்னார் திருப்பாத கஞ்சம் - அதில்
பொங்கி வழிந்தே யுருகுதென் நெஞ்சம்

66. இன்னமும் செய்யாதே வஞ்சம் - நீதான்
ஏழைக் கிரங்கினால் இதிலென்ன பஞ்சம்

67. ஜென்மம் கடைத்தேற கொஞ்சம் - தயை
செய்யவேண்டுமுருகையனே தஞ்சம்

68. அய்யய்யோ பாழுங் குடும்பம் - அதை
ஆரம்பஞ் செய்கையில் யான்கண்ட இன்பம்

69. பொய்யல்ல மெய்யான துன்பம் - இப்போ
புகுந்தறுக்குது கவலை என்கின்ற ரம்பம்

70. ஆருக்கு யார் சத மய்யா
அவரவர் வினைக்கவர் அடைவதென பொய்யா

71. சண்டாள துஷ்ட னானாலும் - உன்னைச்
சார்ந்தபின் விட்டுவிடக் கூடாதெக்காலும்



72. செய்ததெல் லாமுந்தப் பையா - மெய்யாய்ச்
செய்திடேன் பிழைகளினி மேலும் சுப்பையா

73. பிள்ளைமேல் தாய்க்குண்டோ கோபம் - இதைப்
பேசப்போ னாலையோ பெரியபரி தாபம்

74. எப்போதும் இக் கஷ்டந்தானோ - இதற்
கென்னபதில் சொல்லுகிறாய் உன்னை
விடுவேனோ

75. முருகாவென் றுன்னையொரு தரமே - நெஞ்சில்
மொழிந்தாலும் ஆனந்தம் வழியும் நிரந்தரமே

76. நான் மட்டும் பாபியா சொல்லு - உனக்கு
நன்றா யிருக்குதா ஏனிந்த மல்லு

77. நம்பியிருக் கின்றேனே நேமா
நட்டாற்றி லென்னைக்கை விட்டுவிடப் போமா

78. மாயை யெனும் சண்டாளப் பூதம் - தினம்
வம்புக் கிழுத்தென்னைச் செய்யுதே பிரமாதம்

79. வறுமையெனும் வியாதியோ துக்கம் - அது
வந்துவிடு மோவென்ற பயமதொரு பக்கம்

80. ஜீவவதை செய்ததொரு கோடி - இன்னம்
செய்வதை நிறுத்த விலை திவ்யகவி பாடி

81. தோத்தரித்தேனே ப்ரபந்தம் - அதில்
சுகமென்ன செய்கையிலோ நான்மிக்க பந்தம்

82. மெய்ஞ்ஞான பேச்சுகள னந்தம் - கற்ற
மேலோர்க்கு மேலாகப் பேசவானந்தம்

83. வஞ்சகம் பலபேர்க்குச் செய்தேன் - ஞான
வாழ்வுடைய பெரியோரைத் தாழ்வு
சொலிவைதேன்

84. தரியிலே ஓடுகிற நாடா - போலும்
தங்காமல் ஓடியலைந் தின்னமுமிப் பாடா

85. செட்டிமகனே இந்தச் சூது - நீதான்
செய்வதிற் பலனில்லை ஐம்பஞ் செல்லாது

86. வட்டிக்கு வட்டி தப்பாது - உன்பால்
வாங்காமல் விட்டிடிலென் வஞ்சந் தீராது

87. அருட்ஜோதி முருகனெனும் நாமா
அய்யநான் உன்னடிமை கையைவிடலாமா

88. சிதம்பரம் பாண்டி நாயகனே
செங்கைவடி வேலழக சிங்காரமுகனே

89. சென்னைவட பழனிவளர் தீரா-செல்வ
சித்திகள னைத்துமருள் சித்திர மயூரா

90. திருவொற்றி யூர்வளருந் தேவே - திகழ்
தேசுறு குகேச முருகேச என்கோவே

91. திருமூலட் டானத்தை நாடி - நான்
செந்தமிழில் கவிபாடி வந்தேனுனைத் தேடி

92. வள்ளலார்க் கருள்செய்த முத்தே - மேலாம்
வானவருக் குதவி செயும் ஞானமய வித்தே

93. அருணகிரி பரவிய விசாகா - தெய்வ
அரியதிருப் புகழோதும் பிரியர்களின் மோகா

94. காவடி எடுப்போர்க்கு நேயா - உலகில்
கண்கண்ட தெய்வமே எண்டிரு சகாயா

95. சிவலிங்கம் பங்கில் வளர் தேனே - அவர்
செய்கின்ற பூஜைதனைக் கைகொள்ளுவோனே

96. வாழையடி வாழையாய்த் தானே - பூசை
வாங்கிக்கொள சந்ததி வழங்கிடும் கோமானே

97. உன்னாணை யென்னையும் விடாதே - எனக்கு
உனையன்றித் துணையில்லை எனையாள்
இப்போதே

98. மாதேஜோ மண்டலத் தெந்தாய் - தேவை
மகிழ் பாம்பன் சாமிக்கு வந்துவரந் தந்தாய்

99. மூவாறு கண்ணுடைய மூர்த்தி - அய்யா
மூவுலகும் பேசுதே தேவாநின் கீர்த்தி



100. நயினாசாமிக்குரிய நேசன்
நடராஜ கவிநாயேன் அடியவர்கள் தாசன்

101. காவடி புகழ்ச்சி யுன்மீது - ஏதோ
காமா சோமாவென்று பாடினனிப் போது

102. தட்டாமல் இதையேற்றுக் கொண்டு - சகல
சம்பத்தும் நீ தருவாய் என்பத்தி கண்டு

103. நான்சொன்ன பாடலிதைப் பாடி - வரும்
நண்பர்களுக் கன்புசெய முன்பெதிர்வா தேடி

104. கோடானு கோடி நமஸ் காரம் - எந்தன்
குறைதீர்த்து ஆளுவதும் துரையே யுன்பாரம்

105. குமர குருபர குகனே வேல்வேல்
அமரர் தொழும் சமரபுரி அறுமுகனே
வேல்வேல்

106. அருள்புரிக அருள்புரிக வேல்வேல்
அருள்புரிக அருள்புரிக ஆனந்த வேல்வேல்

107. வெற்றி சாமுண்டி வடிவேல்வேல்
வேற்சாமி சிவலிங்க வீரவடி வேல்வேல்

108. சீராரும் ஞானகுருநாதா - உனைச்
சிந்தித்த மைந்தற் கிரங்கும் வினோதா.

**சஷ்டி காவடிச் சிந்து முற்றிறு**

உ

# திருப்புகழ்

## அருணகிரிநாதர்

### விநாயகர் துதி

கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்

மத்தமும் மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா

அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.



**2**

உம்பர்தருத் தேனுமணிக் கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி

இன்பரசத் தேபருகிப் பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே

தம்பிதனக் காகவனத் தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே

அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப் பெருமாளே.

**3**

பக்கரைவி சித்ரமணி பொற்கலணை யிட்டநடை
பட்சியெனு முக்ரதுர கமுநீபப்
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்

திக்கதும திக்கவரு குக்குடமும் ரக்ஷைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
செப்பெனஎ னக்கருள்கை மறவேனே

இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
எட்பொரிய வற்றுவரை யிளநீர்வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்

மிக்கஅடி சிற்கடலை பக்ஷணமெ னக்கொளொரு
விக்கினச மர்த்தனெனு மருளாழி
வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்
வித்தகம ருப்புடைய பெருமாளே.

**4**

விடைமடைசு வேலை யமரர்படை சூலம்
விசையன்விடு பாண மெனவேதான்
விழியுமதி பார விதமுமுடை மாதர்
வினையின்விளை வேது மறியாதே

கடியுலவு பாயல் பகலிரவெ னாது
கலவிதனில் மூழ்கி வறிதாய
கயவனறி வீன னிவனுமுயர் நீடு
கழலிணைகள் சேர அருள்வாயே

இடையர்சிறு பாலை திருடிகொடு போக
இறைவன்மகள் வாய்மை யறியாதே
இதயமிக வாடி யுடையபிளை நாத
கணபதியெ னாம முறைகூற

அடையலவ ராவி வெருவஅடி கூர
அசலுமறி யாம லவரோட
அகல்வதென டாசொ லெனவுமுடி சாட
அறிவருளும் ஆனை முகவோனே.

5

நினது திருவடி சத்திம யிற்கொடி
நினைவு கருதிடு புத்திகொ டுத்திட
நிறைய அமுதுசெய்முப்பழ மப்பமு நிகழ்பால்தேன்
நெடிய வளைமுறி யிக்கொடு லட்டுகம்
நிறவி லரிசிப ருப்பவ லெட்பொரி
நிகரி லினிகத லிக்கனி வர்க்கமு மிளநீரும்

மனது மகிழ்வொடு தொட்டக ரத்தொரு
மகர சலநிதி வைத்தது திக்கர
வளரு கரிமுக வொற்றைம ருப்பனை வலமாக
மருவு மலர்புனை தொத்திர சொற்கொடு
வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு
வனச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே

தெனன தெனதென தெத்தெனெ னப்பல
சிறிய அறுபத மொய்த்துதி ரப்புனல்
திரளு முறுசதை பித்தநி ணக்குடல் செறிமூளை
செரும வுதரநி ரப்புசெ ருக்குட
னிரைய வரவநி றைத்தக ளத்திடை
திமித திமிதிமி மத்தளி டக்கைகள் செகசேசே



எனவெ துகுதுகு துத்தென வொத்துகள்
துடிக ளிடிமிக வொத்துமு ழக்கிட
டிமுட டிமுடிமு டிட்டிமெ னத்தவி லெழுமோசை
இகலி யலகைகள் கைப்பறை கொட்டிட
இரண பயிரவி சுற்றுந டித்திட
எதிரு நிசிசர ரைப்பெலி யிட்டருள் பெருமாளே

நூல்

6

முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனவோதும்
முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத் தமரரு மடிபேணப்

பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியி லிரவாகப்
பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பக்ஷத்தொடு ரக்ஷித் தருள்வது மொருநாளே

தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு கழுதாடத்
திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக எனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை
கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே

## முதலாவது படைவீடாகிய
## திருப்பரங்குன்றம்

### 7

உனைத்தி னந்தொழு திலனுன தியல்பினை
உரைத்தி லன்பல மலர்கொடு னடியிணை
உறப்ப ணிந்தில னொருதவ மிலனுன தருள்மாறா
உளத்து ளன்பின ருறைவிட மறிகிலன்
விருப்பொ டுன்சிக ரமும்வலம் வருகிலன்
உவப்பொ டுன்புகழ் துதிசெய விழைகிலன் மலைபோலே
கனைத்தெ ழும்பக டதுபிடர் மிசைவரு
கறுத்த வெஞ்சின மறலித னுழையினர்
கதித்த டர்ந்தெறி கயிறடு கதைகொடு பொருபோதே
கலக்கு றுஞ்செய லொழிவற அழிவுறு
கருத்து நைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்தி லென்பய மறமயில் முதுகினில் வருவாயே
வினைத்த லந்தனி லலகைகள் குதிகொள
விழுக்கு டைந்துமெ யுகுதசை கழுகுண
விரித்த குஞ்சிய ரெனுமவு ணரையமர் புரிவேலா
மிகுத்த பண்பயில் குயில்மொழி யழகிய
கொடிச்சி குங்கும முலைமுக டுழுநறை
விரைத்த சந்தன மிருகமத புயவரை யுடையோனே
தினத்தி னஞ்சதுர் மறைமுநி முறைகொடு
புனற்சொ ரிந்தலர் பொதியவி ணவரொடு
சினத்தை நிந்தனை செயுமுநிவரர்தொழ மகிழ்வோனே
தெனத்தெ னந்தன எனவரி யளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழில்திகழ்
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே.

### 8

கறுக்கு மஞ்சன விழியிணை அயில்கொடு
நெருக்கி நெஞ்சற எறிதரு பொழுதொரு
கனிக்கு ளின்சுவை யமுதுகு மொருசிறு நகையாலே



களக்கொ ழுங்கலி வலைகொடு விசிறியெ
மனைக்கெ ழுந்திரு மெனமன முருகவொர்
கவற்சி கொண்டிட மனைதனிலழகொடு கொடுபோகி

நறைத்த பஞ்சணைமிசையினின் மனமுற
அணைத் தகந்தனி லிணைமுலை யெதிர்பொர
நகத்த முந்திட அமுதிதழ் பருகியு மிடறூடே
நடித்தெ ழுங்குரல் குமுகுமு குமுவென
இசைத்து நன்கொடு மனமது மறுகிட
நழுப்பு நஞ்சன சிறுமிகள் துயரற அருள்வாயே

நிறைத்த தெண்டிரை மொகுமொகு மொகுவென
வுரத்த கஞ்சுகி முடிநெறு நெறுவென
நிரைத்த அண்டமு கடுகிடு கிடுவென வரைபோலும்
நிவத்த திண்கழல் நிசிசர ருரமொடு
சிரக்கொ டுங்குவை மலைபுரை தரவிரு
நிணக்கு ழம்பொடு குருதிகள் சொரிதர அடுதீரா

திறற்க ருங்குழ லுமையவ ளருளுறு
புழைக்கை தன்கட கயமுக மிகவுள
சிவக்கொ ழுந்தன கணபதி யுடன்வரு மிளையோனே
சினத்தொ டுஞ்சம னுதைபட நிறுவிய
பரற்கு ளன்புறு புதல்வநன் மணியுகு
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே.

### 9

வடத்தை மிஞ்சிய புளகித வனமுலை
தனைத்தி றந்தெதிர் வருமிளை ஞர்களுயிர்
மயக்கியைங்கணை மதனனையொருஅரு மையினாலே
வருத்தி வஞ்சக நினைவொடு மெலமெல
நகைத்து நண்பொடு வருமிரு மெனவுரை
வழுத்தி யங்கவ ரொடுசரு வியுமுடல் தொடுபோதே

விடத்தை வென்றிடு படைவிழி கொடுமுள
மருட்டி வண்பொருள் கவர்பொழு தினின்மயல்
விருப்பெ னும்படி மடிமிசை யினில்விழு
தொழில்தானே
விளைத்தி டும்பல கணிகையர் தமதுபொய்
மனத்தை நம்பிய சிறியனை வெறியனை
விரைப்ப தந்தனி லருள்பெறநினைகுவ துளதோதான்

குடத்தை வென்றிரு கிரியென எழில்தள
தளத்த கொங்கைகள் மணிவட மணிசிறு
குறக்கரும்பின் மெய்துவள் புயனெனவரு வடிவேலா
குரைக்க ருங்கடல் திருவணை யெனமுனம்
அடைத்தி லங்கையி னதிபதி நிசிசரர்
குலத்தொடும்பட வொருகணை விடுமரி மருகோனே

திடத்தெ திர்ந்திடு மசுரர்கள் பொடிபட
அயிற்கொ டும்படை விடுசரவணபவ
திறற்கு கன்குரு பரனென வருமொரு முருகோனே
செழித்த தண்டலை தொறுமில கியகுட
வளைக்கு லந்தரு தரளமு மிகுமுயர்
திருப்ப ரங்கிரி வளநகர் மருவிய பெருமாளே

## 10

கனகந்திரள் கின்றபெ ருங்கிரி
தனில்வந்துத கன்தக னென்றிடு
கதிர்மிஞ்சிய செண்டை யெறிந்திடு கதியோனே
கடமிஞ்சிய நந்தவி தம்புணர்
கவளந்தனை யுண்டுவ ளர்ந்திடு
கரியின்றுணை யென்றுபி றந்திடு முருகோனே

பனகந்துயில் கின்ற திறம்புனை
கடல்முன்புக டைந்தப ரம்பரர்
படரும்புய லென்றவ ரன்புகொள் மருகோனே
பலதுன்பமு மூன்றுக லங்கிய
சிறியன்புலை யன்கொலை யன்புரி
பவமின்றுக ழிந்திட வந்தருள் புரிவாயே



அனகன்பெயர் நின்றுரு ளுந்திரி
புரமுந்திரி வென்றிட வின்புடன்
அழலுந்தந குந்திறல் கொண்டவர் புதல்வோனே
அடல்வந்துமு ழங்கியி டும்பறை
டுடுடுண்டுடு டுண்டுடு டுண்டென
அதிர்கின்றிட அண்ட நெரிந்திட வருசூரர்

மனமுந்தழல் சென்றிட வன்றவ
ருடலுங்குட லுங்கிழி கொண்டிட
மயில்வென்றனில் வந்தரு ளுங்கன பெரியோனே
மதியுங்கதி ருந்தட வும்படி
யுயர்கின்றவ னங்கள்பொ ருந்திய
வளமொன்றுப ரங்கிரி வந்தருள் பெருமாளே

## 11

சருவும்படி வந்தன னிங்கித
மதனின்றிட அம்புலி யுஞ்சுடு
தழல்கொண்டிட மங்கையர் கண்களின் வசமாகி
சயிலங்கொளு மன்றல்பொ ருந்திய
பொழிலின்பயில் தென்றலு மொன்றிய
தடவஞ்சுனை துன்றியெ ழுந்திட திரமாவே,

இரவும்பக லந்தியு நின்றிடு
குயில்வந்திசை தெந்தன வென்றிட
இருகண்களிது யின்றிட லின்றியும் அயர்வாகி
இவணெஞ்சுப தன்பத னென்றிட
மயல்கொண்டுவ ருந்திய வஞ்சகன்
இனியுன்றன்ம லர்ந்தில கும்பதம் அடைவேனோ

திருவொன்றிவி ளங்கிய அண்டர்கள்
மனையின்தயி ருண்டவ னெண்டிசை
திகழும்புகழ் கொண்டவன் வண்டமிழ் பயில்வோர்பின்
திரிகின்றவன் மஞ்சுநி றம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொள வென்றடல்
ஜெயதுங்கமு குந்தன் மகிழ்ந்தருள் மருகோனே

மருவுங்கடல் துந்துமி யுங்குட
முழவங்கள்கு மின்குமி னென்றிட
வளமொன்றிய செந்திலில் வந்தருள் முருகோனே
மதியுங்கதி ரும்புய லுந்தின
மறுகும்படி அண்டமி லங்கிட
வளர்கின்றப ரங்கிரி வந்தருள் பெருமாளே.

## 12

அருக்கு மங்கையர் மலரடி வருடியெ
கருத்த றிந்துபி னரைதனி லுடைதனை
அவிழ்த்து மங்குள அரசிலை தடவியு மிருதோளுற்
றணைத்து மங்கையி னடிதொறு நகமெழ
வுதட்டை 'மென்றுப லிடுகுறி களுமிட
அடிக்க ளந்தனில் மயில்குயில் புறவென
மிகவாய்விட்

டுருக்கு மங்கியின் மெழுகென வுருகிய
சிரத்தை மிஞ்சிடு மநுபவ முறுபல
முறக்கை யின்கனி நிகரெனஇலகிய முலைமேல்வீழ்ந்
துருக்க லங்கிமெ யுருகிட வமுதுகு
பெருத்த வுந்தியின் முழுகிமெ யுணர்வற
வுழைத்தி டுங்கன கலவியைமகிழ்வது தவிர்வேனோ

இருக்கு மந்திர மெழுவகை முநிபெற
வுரைத்த சம்ப்ரம சரவண பவகுக
இதத்த இங்கித மிலகிய அறுமுக எழில்வேளென்
றிலக்க ணங்களுமியலிசை களுமிக
விரிக்கு மம்பல மதுரித கவிதனை
யியற்று செந்தமிழ் விதமொடு புயமிசை
புனைவோனே

செருக்கு மம்பல மிசைதனி லசைவுற
நடித்த சங்கரர் வழிவழி யடியவர்
திருக்கு ருந்தடி யருள்பெற அருளிய குருநாதர்
திருக்கு ழந்தையு மென அவர் வழிபடு
குருக்க ளின்திற மெனவரு பெரியவ
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே.



## 13

கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து முற்றிப்ப யின்று
கடையில் வந்து தித்துக் குழந்தை வடிவாகி
கழுவியங்கெ டுத்துச்சு ரந்த
முலையருந்து விக்கக்கி டந்து
கதறியங்கை கொட்டித்த வழ்ந்து நடமாடி

அரைவடங்கள் கட்டிச் சதங்கை
யிடுகுதம்பை பொற்சுட்டி தண்டை
யவையணிந்து முற்றிக்கி ளர்ந்து வயதேறி
அரிய பெண்கள் நட்பைப்பு ணர்ந்து
பிணியுழன்று சுற்றித்தி ரிந்த
தமையுமுன்க்ரு பைச்சித்த மென்று பெறுவேனோ

இரவி யிந்த்ரன் வெற்றிக்கு ரங்கி
னரச ரென்று மொப்பற்ற வுந்தி
யிறைவ னெண்கி னக்கர்த்தனென்றும் நெடுநீலன்
எரிய தென்றும் ருத்ரற்சி றந்த
அநும னென்றும் ஒப்பற்ற அண்டர்
எவரு மிந்த வர்க்கத்தில் வந்து புனமேவ

அரிய தன்ப டைக்கர்த்த ரென்று
அசுரர் தங்கி ளைக்கட்டை வென்ற
அரிமுகுந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே
அயனை யும்பு டைத்துச்சி னந்து
உலக மும்ப டைத்துப்ப ரிந்து
அருள்ப ரங்கி ரிக்குட்சி றந்த பெருமாளே

## 14

காதட ருங்கயல் கொண்டிசைந் தைம்பொறி
வாளிம யங்கம னம்பயந் தந்திருள்
கால்தர விந்துவி சும்பிலங் கும்பொழு தொருகோடி
காய்கதி ரென்றொளிர் செஞ்சிலம் புங்கணை
யாழியு டன்கட கந்துலங் கும்படி
காமனெடுஞ்சிலை கொண்டடர்ந்தும் பொருமயலாலே

வாதுபு ரிந்தவர் செங்கைதந் திங்கித
மாகந டந்தவர் பின்திரிந் துந்தன
மார்பில முந்தவ ணைந்திடுந் துன்பம துழலாதே
வாசமி குந்தக டம்பமென் கிண்கிணி
மாலைக ரங்கொளு மன்பர்வந் தன்பொடு
வாழறி தம்புனை யும்பதந் தந்துன தருள்தாராய்

போதிலு றைந்தருள் கின்றவன் செஞ்சிர
மீதுத டிந்துவி லங்கிடும் புங்கவ
போத வளஞ்சிவ சங்கரன் கொண்டிட மொழிவோனே
பூகமு டன்திகழ் சங்கினங் கொண்டகி
ரீவம டந்தைபு ரந்தரன் தந்தருள்
பூவைக ருங்குற மின்கலந் தங்குப னிருதோளா

தீதக மொன்றினர் வஞ்சகந் துஞ்சியி
டாதவர் சங்கரர் தந்ததென் பும்பல
சேர்நிரு தன்குல மஞ்சமுன் சென்றடு திறலோனே
சீதள முந்தும ணந்தயங் கும்பொழில்
சூழ்தர விஞ்சைகள் வந்திறைஞ் சும்பதி
தேவர்ப ணிந்தெழு தென்பரங் குன்றுறை பெருமாளே

## 15

சந்ததம் பந்தத் தொடராலே
சஞ்சலந் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்றுற் றுனைநாளும்
கண்டுகொண் டன்புற் றிடுவேனோ

தந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் சிவைபாலா
செந்திலங் கண்டிக் கதிர்வேலா
தென்பரங் குன்றிற் பெருமாளே.

## 16

தடக்கைப் பங்கயங் கொடைக்குக் கொண்டல்தண்
டமிழ்க்குத் தஞ்சமென் றுலகோரைத்
தவித்துச் சென்றிரந் துளத்திற் புண்படுந்
தளர்ச்சிப் பம்பரந் தனையூசற்



கடத்தைத் துன்பமண் சடத்தைத் துஞ்சிடுங்
கலத்தைப் பஞ்சஇந் த்ரியவாழ்வைக்
கணத்திற் சென்றிடந் திருத்தித் தண்டையங்
கழற்குத் தொண்டுகொண் டருள்வாயே

படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்
பணித்துத் தம்பயந் தணித்துச் சந்ததம்
பரத்தைக் கொண்டிடுந் தனிவேலா

குடக்குத் தென்பரம் பொருப்பிற் றங்குமங்
குலத்திற் கங்கைதன் சிறியோனே
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே.

## 17

பதித்தசெஞ் சந்தப் பொற்குட நித்தம்
பருத்துயர்ந் தண்டத் திற்றலை முட்டும்
பருப்பதந் தந்தச் செப்பவை யொக்குந் தனபாரம்

படப்புயங் கம்பற் கக்குக டுப்பண்
செருக்குவண் டம்பப் பிற்கய லொக்கும்
பருத்தகண் கொண்டைக் கொக்கு மிருட்டென்
றிளைஞோர்கள்

துதித்துமுன் கும்பிட் டுற்றது ரைத்தன்
புவக்கநெஞ் சஞ்சச் சிற்றிடை சுற்றுந்
துகிற்களைந் தின்பத் துர்க்கம ளிக்குங்
கொடியார்பால்

துவக்குணும் பங்கப் பித்தன வத்தன்
பவுக்குளென் சிந்தைப் புத்திம யக்கந்
துறக்கநின் தண்டைப் பத்மமெ னக்கென்
றருள்வாயே

குதித்துவெண் சங்கத் தைச்சுற வெற்றுங்
கடற்கரந் தஞ்சிப் புக்கவ ரக்கன்
குடற்சரிந் தெஞ்சக் குத்திவி திர்க்குங் கதிர்வேலா

குலக்கரும் பின்சொற் றத்தையி பப்பெண்
தனக்குவஞ் சஞ்சொற் பொச்சையி டைக்குங்
குகுக்குகுங் குங்குக் குக்குகு குக்குங் குகுகூகூ

திதித்திதிந் தித்தித் தித்தியெ னக்கொம்
பதிர்த்துவெண் சண்டக் கட்கம்வி திர்த்துந்
திரட்குவிந் தங்கட் பொட்டெழ வெட்டுங்
கொலைவேடர்
தினைப்புனஞ் சென்றிச் சித்தபெ ணைக்கண்
டுருக்கரந் தங்குக் கிட்டிய ணைத்தொண்
திருப்பரங் குன்றிற் புக்குளி ருக்கும் பெருமாளே.

## 18

பொருப்புறுங் கொங்கையர் பொருட்கவர்ந் தொன்றிய
பிணக்கிடுஞ் சண்டிகள் வஞ்சமாதர்
புயற்குழன் றங்கமழ் அறற்குலந் தங்கவிர்
முருக்குவண் செந்துவர் தந்துபோகம்
அருத்திடுஞ் சிங்கியர் தருக்கிடுஞ் செங்கயல்
அறச்சிவந் தங்கையி லன்புமேவும்
அவர்க்குழன் றங்கமு மறத்தளர்ந் தென்பயன்
அருட்பதம் பங்கயம் அன்புறாதோ
மிருத்தணும் பங்கய னலர்க்கணன் சங்கரர்
விதித்தெணுங் கும்பிடு கந்தவேளே
மிகுத்திடும் வன்சம ணரைப்பெருந் திண்கழு
மிசைக்கிடுஞ் செந்தமி ழுங்கவாயா
பெருக்குதண் சண்பக வனத்திடங் கொங்கொடு
திறற்செழுஞ் சந்தகில் துன்றிநீடு
தினைப்புனம் பைங்கொடி தனத்துடன் சென்றணை
திருப்பரங் குன்றுறை தம்பிரானே.

## 19

மன்றலங் கொந்துமிசை தெந்தனந் தெந்தனென
வண்டினங் கண்டுதொடர் குழல்மாதர்
மண்டிடுந் தொண்டையமு துண்டுகொண் டன்புமிக
வம்பிடுங் கும்பகன தனமார்பில்
ஒன்றஅம் பொன்றுவிழி கன்றஅங் கங்குழைய
உந்தியென் கின்றமடு விழுவேனை
உன்சிலம் புங்கனக தண்டையுங் கிண்கிணியும்
ஒண்கடம் பும்புனையும் அடிசேராய்



பன்றியங் கொம்புகம டம்புயங் கஞ்சுரர்கள்
பண்டையென் பங்கமணி பவர்சேயே
பஞ்சரங் கொஞ்சுகிளி வந்துவந் தைந்துகர
பண்டிதன் தம்பியெனும் வயலூரா
சென்றுமுன் குன்றவர்கள் தந்தபெண் கொண்டுவளர்
செண்பகம் பைம்பொன்மலர் செறிசோலை
திங்களுஞ் செங்கதிரு மங்குலுந் தங்குமுயர்
தென்பரங் குன்றிலுறை பெருமாளே.

## 20

வரைத்தடங் கொங்கை யாலும்
வளைப்படுஞ் செங்கை யாலும்
மதர்த்திடுங் கெண்டை யாலு மனைவோரும்
வடுப்படுந் தொண்டை யாலும்
விரைத்திடுங் கொண்டை யாலும்
மருட்டிடுஞ் சிந்தை மாதர் வசமாகி
எரிப்படும் பஞ்சு போல
மிகக்கெடுந் தொண்ட னேனும்
இனற்படுந் தொந்த வாரி கரையேற
இசைத்திடுஞ் சந்த பேத
மொலித்திடுந் தண்டை சூழும்
இணைப்பதம் புண்ட ரீக மருள்வாயே
சுரர்க்குவஞ் சஞ்செய் சூர
னிளக்ரவுஞ் சந்த னோடு
துளக்கெழுந் தண்ட கோள மளவாகத்
துரத்தியன் றிந்த்ர லோக
மழித்தவன் பொன்று மாறு
சுடப்பருஞ் சண்ட வேலை விடுவோனே
செருக்கெழுந் தும்பர் சேனை
துளக்கவென் றண்ட ரூடு
தெழித்திடுஞ் சங்க பாணி மருகோனே
தினைப்புனஞ் சென்று லாவு
குறத்தியின் பம்ப ராவு
திருப்பரங் குன்ற மேவு பெருமாளே.

## இரண்டாவது படைவீடாகிய
## திருச்செந்தூர்

### 21

அந்தகன் வருந்தினம் பிறகிடச்
சந்ததமும் வந்துகண் டரிவையர்க்
கன்புருகு சங்கதந் தவிரமுக் குணமாள
அந்திபக லென்றிரண் டையுமொழித்
திந்திரிய சஞ்சலங் களையறுத்
தம்புயப தங்களின் பெருமையைக் கவிபாடிச்

செந்திலையு ணார்ந்துணர்ந் துணர்வுறக்
கந்தனைய றிந்தறிந் தறிவினிற்
சென்றுசெரு குந்தடந் தெளிதரத் தணியாத
சிந்தையும விழ்ந்தவிழ்ந் துரையொழித்
தென்செய லழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவர என்றுநின் தெரிசனைப் படுவேனோ

கொந்தவிழ் சரண்சரண் சரணெனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெறஅரக் கருமாளக்
குன்றிடிய அம்பொனின் திருவரைக்
கிண்கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டல மசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீசத்

தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத் திருவான
சங்கரி மனங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததி சகந்தொழுஞ் சரவணப் பெருமாளே.

### 22

அருணமணி மேவு பூஷித ம்ருகமத படீர லேபன
அபிநவ விசால பூரண
அம்பொற் கும்பத் தனமோதி



அளிகுலவு மாதர் லீலையின் முழுகியபி ஷேக மீதென
அறவுமுற வாடி நீடிய
அங்கைக் கொங்கைக் கிதமாகி

இருணிறைய மோதி மாலிகை சருவியுற வான வேளையி
லிழைகலைய மாத ரார்வழி
யின்புற் றன்புற் றழியாநீள்

இரவுபகல் மோக னாகியெ படியில்மடி யாமல் யானுமுன்
இணையடிகள் பாடி வாழஎ
னெஞ்சிற் செஞ்சொற் றருவாயே

தருணமணி யாட ராவணி குடிலசடி லாதி யோதிய
சதுர்மறையி னாதி யாகிய
சங்கத் துங்கக் குழையாளர்

தருமுருக மேக சாயலர் தமரமக ராழி சூழ்புவி
தனைமுழுதும் வாரி யேயமு
துண்டிட் டண்டர்க் கருள்கூரும்

செருமுதலி மேவு மாவலி யதிமதக போல மாமலை
தெளிவினுடன் மூல மேயென
முந்தச் சிந்தித் தருள்மாயன்

திருமருக சூரன் மார்பொடு சிலையுருவ வேலை யேவிய
ஜெயசரவ ணாம னோகர
செந்திற் கந்தப் பெருமாளே.

### 23

அறிவழிய மயல்பெருக வுரையுமற விழிசுழல
அனலவிய மலமொழுக அகலாதே
அனையுமனை யருகிலுற வெருவியழ வுறவுமழ
அழலினிகர் மறலியெனை யழையாதே

செறியுமிரு வினைகரண மருவுபுல னொழியவுயர்
திருவடியி லணுகவர மருள்வாயே
சிவனைநிகர் பொதியவரை முநிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே

நெறிதவறி யலரிமதி நடுவன்மக பதிமுளரி
நிருதிநிதி பதிகரிய வனமாலி
நிலவுமறை யவனிவர்க ளலையஅர சுரிமைபுரி
நிருதனுர மறஅயிலை விடுவோனே

மறிபரசு கரமிலகு பரமனுமை யிருவிழியு
மகிழமடி மிசைவளரு மிளையோனே
மதலைதவ ழுததியிடை வருதரள மணிபுளின
மறையவுயர் கரையிலுறை பெருமாளே.

**24**

அனைவரு மருண்ட ருண்டு கடிதென வெகுண்டி யம்ப
அமரஅடி பின்தொ டர்ந்து பிணநாறு
மழுகுபிணி கொண்டு விண்டு புழுவுட னெலும்பலம்பு
மவலவுட லஞ்சு மந்து தடுமாறி

மனைதொறு மிதம்ப கர்ந்து வரவர விருந்த ருந்தி
மனவழி திரிந்து மங்கும் வசைதீர
மறைசதுர் விதந்தெ ரிந்து வகைசிறு சதங்கைகொஞ்ச
மலரடி வணங்க என்று பெறுவேனோ

தினைமிசை சுகங்க டிந்த புனமயி லிளங்கு ரும்பை
திகழிரு தனம்பு ணர்ந்த திருமார்பா
ஜெகமுழுது முன்பு தும்பி முகவனொடு தந்தை முன்பு
திகிரிவலம் வந்த செம்பொன் மயில்வீரா

இனியகனி மந்தி சிந்து மலைகிழவ செந்தில் வந்த
இறைவகுக கந்த என்று மிளையோனே
எழுகடலு மெண்சி லம்பும் நிசிசரரும் அஞ்ச அஞ்சு
மிமையவரை யஞ்ச லென்ற பெருமாளே.

**25**

இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே
உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி
உனையெனது ளறியு மன்பைத் தருவாயே



மயில் தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்
வனசகுற மகளை வந்தித் தணைவோனே
கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே.

**26**

இருகுழையெறிந்தகெண்டைகள் ஒருகுமிழடர்ந்துவந்திட
இணைசிலைநெ ரிந்தெ ழுந்திட அணைமீதே
இருளளக பந்தி வஞ்சியி லிருகலையு டன்கு லைந்திட
இதழமுத ருந்து சிங்கியின் மனமாய

முருகொடுக லந்த சந்தன அளறுபடு குங்கு மங்கமழ்
முலைமுகடு கொண்டெ ழுந்தொறு முருகார
முழுமதிபு ரிந்த சிந்துர அரிவையரு டன்க லந்திடு
முகடியுந லம்பி றந்திட அருள்வாயே

எரிவிடநி மிர்ந்த குஞ்சியி னிலவொடு மெழுந்த கங்கையு
மிதழியொட ணிந்த சங்கரர் களிகூரும்
இமவரைத ருங்க ருங்குயில் மரகதநி றந்த ருங்கிளி
யெனதுயிரெ னுந்த்ரி யம்பகி பெருவாழ்வே

அரைவடம் லம்பு கிண்கிணி பரிபுர நெருங்கு தண்டைக
ளணிமணிச தங்கை கொஞ்சிட மயில்மேலே
அகமகிழ்வு கொண்டுசந்ததம் வருகுமர முன்றி லின்புறம்
அலைபொருத செந்தில் தங்கிய பெருமாளே.

**27**

இருள்விரி குழலை விரித்துத் தூற்றவு
மிறுகிய துகிலை நெகிழ்த்துக் காட்டவு
மிருகடை விழியு முறுக்கிப் பார்க்கவு மைந்தரோடே
இலைபிள வதனை நடித்துக் கேட்கவு
மறுமொழி பலவு மிசைத்துச் சாற்றவு
மிடையிடை சிறிது நகைத்துக் காட்டவு
மெங்கள்வீடே

வருகென வொருசொ லுரைத்துப் பூட்டவும்
விரிமல ரமளி யணைத்துச் சேர்க்கவும்
வருபொரு ளளவி லுருக்கித் தேற்றவு நிந்தையாலே
வனைமனை புகுதி லடித்துப் போக்கவு
மொருதலை மருவு புணர்ச்சித் தூர்த்தர்கள்
வசைவிட நினது பதத்தைப் போற்றுவ
தெந்தநாளோ

குருமணி வயிர மிழித்துக் கோட்டிய
கழைமட வுருவு வெளுத்துத் தோற்றிய
குளிறிசை யருவி கொழித்துத் தூற்றிய மண்டுநீரூர்
குழிபடு கலுழி வயிற்றைத் தூர்த்தெழு
திடர்மண லிறுகு துருத்திக் காப்பொதி
குளிர்நிழ லருவி கலக்கிப் பூப்புனை வண்டலாடா

முருகவிழ் துணர்க ளுகுத்துக் காய்த்தினை
விளைநடு விதணி லிருப்பைக் காட்டிய
முகிழ்முலை யிளைய குறத்திக் காட்படு செந்தில்வாழ்வே
முளையிள மதியை யெடுத்துச் சாத்திய
சடைமுடி யிறைவர் தமக்குச் சாத்திர
முறையருள் முருக தவத்தைக் காப்பவர்
தமபிரானே.

## 28

உததியறல் மொண்டு சூல்கொள்கரு
முகிலெனஇ ருண்ட நீலமிக
வொளிதிகழு மன்ற லோதிநரை பஞ்சுபோலாய்
உதிரமெழு துங்க வேல்விழி
மிடைகடையொ துங்கு பீளைகளு
முடைதயிர்பி திர்ந்த தோஇதென வெம்புலாலாய்

மதகரட தந்தி வாயினிடை
சொருகுபிறை தந்த சூதுகளின்
வடிவுதரு கும்ப மோதிவளர் கொங்கைதோலாய்
வனமழியு மங்கை மாதர்களி
னிலைதனையு ணர்ந்து தாளிலுறு
வழியடிமை யன்பு கூருமது சிந்தியேனோ



இதழ்பொதிய விழ்ந்த தாமரையின்
மணவறைபு குந்த நான்முகனு
மெறிதிரைய லம்பு பாலுததி நஞ்சராமேல்
இருவிழிது யின்ற நாரணனு
முமைமருவு சந்த்ர சேகரனு
மிமையவர்வ ணங்கு வாசவனு நின்றுதாழும்

முதல்வசுக மைந்த பீடிகையி
லகிலசக அண்ட நாயகிதன்
முகிழ்முலைசு ரந்த பாலமுத முண்டவேளே
முளைமுருகு சங்கு வீசியலை
முடுகிமைத வழ்ந்த வாய்பெருகி
முதலிவரு செந்தில் வாழ்வுதரு தம்பிரானே

## 29

ஏவினை நேர்விழி மாதரை மேவிய
ஏதனை மூடனை நெறிபேணா
ஈனனை வீணனை யேடெழு தாமுழு
ஏழையை மோழையை அகலாநீள்
மாவினை மூடிய நோய்பிணி யாளனை
வாய்மையி லாதனை யிகழாதே
மாமணி நூபுர சீதள தாள்தனி
வாழ்வுற ஈவது மொருநாளே
நாவலர் பாடிய நூலிசை யால்வரு
நாரத னார்புகல் குறமாதை
நாடியெ கானிடை கூடிய சேவக
நாயக மாமயி லுடையோனே
தேவிம னோமணி ஆயிப ராபரை
தேன்மொழி யாள்தரு சிறியோனே
சேணுயர் சோலையி னீழலி லேதிகழ்
சீரலை வாய்வரு பெருமாளே.

## 30

ஓரா தொன்றைப் பாரா தந்தத்
தோடே வந்திட் டுயிர்சோர
ஊடா நன்றற் றார்போல் நின்றெட்
டாமால் தந்திட் டுழல்மாதர்

